# குற்ருலத்தில் பருவ அந்தர்யோகம்

## 15—6—83 முதல் 15—8—83 முடிய

திருக்குற்ருலம் ஐந்தருவி ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமத்தில் 1983ஆம் ஆண்டு ஜூன் மாதம் 15ஆம் தேதி முதல் ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதி முடிய இரண்டு மாதங்களுக்கு கீழ்க்கண்ட சாதனை முறைப்படி அந்தர்யோகம் நடைபெறும். கடிதம் மூலம் குற்ருலத்துக்கு எழுதி முன்கூட்டி அனுமதி பெற்று ஒருவர் மூன்று தினங்களுக்குக் குறையாமலும், பத்து தினங்களுக்கு மேற்படாமலும் இந்த இரண்டு மாதங்களுக்கு நடைபெறும் அந்தர்யோகத்தில் கலந்துகொள்ளலாம். உணவுக்காக நாள் ஒன்றுக்கு ரூபாய் பத்து விதம் ஆச்ரமத்துக்கு வந்தபின் நேரில் செலுத்தினல் போதுமானது. படுக்கை வசதிக்குத் தேவையானதை உடன் கொண்டுவரவேண்டும். தாய்மார்களும் பருவ அந்தர்யோகத்தில் கலந்துகொள்ளலாம். தாய்மார்கள் தங்குவதற்குத் தனி இடவசதி இருக்கிறது. நடைமுறையைப் பின்பற்ற இயலாதவர்களும் 12 வயதிற்குக் கீழ்ப்பட்ட குழந்தைகளும் அந்தர்யோகத்தில் அனுமதிக்கப்படமாட்டார்கள்.

### வாழ்க்கை முறை

**காலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| *திருப்பள்ளியெழுச்சி, தியானம், நாமஜபம்* | 4-30 | 5-15 |
| *ஐந்தருவி ஸ்நானம்* | 5-15 | 7-00 |
| *தியானம்* | 7-00 | 7-30 |
| *சிற்றுண்டி* | 7-30 | |
| *பஜனை* | 10-00 | 10-30 |
| *உபந்யாசம்* | 10-30 | 11-00 |
| *தியானம்* | 11-00 | 11-15 |
| *அர்ச்சனை, தீபாராதனை* | 11-15 | 11-30 |
| *உணவு* | 12-00 | |

**மாலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| *பஜனை* | 3-00 | 3-30 |
| *உபந்யாசம்* | 3-30 | 4-00 |
| *தியானம்* | 4-00 | 4-15 |
| *சிற்றுண்டி* | 4-15 | |
| *நாமபஜனை, ஆரத்ரிகம்* | 6-30 | 7-00 |
| *தியானம்* | 7-00 | 7-30 |
| *உணவு* | 7-30 | |
| *சத் சம்பாஷணை* | 8-00 | 8-30 |

***ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமம்***
*குற்ருலம்-627 802, (வழி) தென்காசி*

*சுவாமி குஹானந்த*

---

### ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுல உயர்நிலைப்பள்ளி

**திருப்பராய்த்துறை-639 115, திருச்சி ஜில்லா.**

இக்குருகுல உயர்நிலைப் பள்ளியில் 4, 5, 6, 7 ஆம் வகுப்புகளில் மட்டும் புதிய மாணவர்களுக்கு, அவர்களுடைய உடல்நிலை, படிப்பு, வேறு இயல்புகள் இவற்றை நேரில் பரிசோதித்த பின் இடமளிக்கப்படும். புதிய மாணவர்களைச் சேர்க்க விரும்புவோர் **மே மாதம் 30ஆம் தேதி காலை 9 மணிக்குள்** மாணவர்களுடன் இங்கு வரவேண்டும். நுழைவுத் தேர்வுகள் அன்று நடத்தப்பெற்று தேர்வு முடிவுகள் அன்றிரவே அறிவிக்கப்படும். இதற்காக விண்ணப்பத்தாள் எதுவும் எழுதியனுப்ப வேண்டியதில்லை. மற்ற நாட்களில் மாணவர்களைச் சேர்த்துக்கொள்வதில்லை. **இலவசமாகவோ குறைந்த செலவிலோ மாணவர்களைச் சேர்த்துக்கொள்வதில்லை. போதனமொழி தமிழ்.** மேலும் விவரம் வேண்டுவோர் 75 பை. தபால்தலை அனுப்பி "வித்யாவன குருகுலச் சட்ட திட்டங்கள்" என்னும் புத்தகத்தைப் பெற்று விவரம் தெரிந்துகொள்ளுங்கள்.

**S. ஈசுவரன்**
*தலைமை ஆசிரியர்*

**சித்பவானந்த**
*தலைவர்*

ருத்ரோத்காரி வைகாசி
13.5

# தர்ம சக்கரம்

## மாத சஞ்சிகை


| சக்கரம் 32 | ருத்ரோத்காரி ௵ வைகாசி ீ | ஆரம் 5 |
|---|---|---|


## பொருளடக்கம்


| | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | பிரார்த்தனை | | 161 |
| 2. | அருள்விருந்து | | 162 |
| 3. | பரமஹம்சர் புகட்டிய பெருநெறி விளக்கம் | | 163 |
| 4. | எங்நாள் கண்ணி | | 166 |
| 5. | நடிப்பு பண்பாடாகாது | சுவாமி விவேகானந்தர் | 168 |
| 6. | பராக்கிரமம் படைத்திரு | | 169 |
| 7. | கபீர்தாசர் சரிதம் | | 173 |
| 8. | ஸ்ரீ லலிதா வியாக்கியானம் - 177 | | 177 |
| 9. | ஸத் ஸம்பாஷணை | | 180 |
| 10. | ஆத்ம போதம் | திரு V. S. நரசிம்மன் | 182 |
| 11. | ஸ்ரீமத் பாகவதம் | சுவாமி ஸதானந்தர் | 185 |
| 12. | குட்டித் திருவாசகம் | வித்துவான் ஆதி பாலசுந்தரன், M. A. | 189 |
| 13. | பெண்பாலர்க்கு சந்நியாசம் அவசியமா? | ஸாரதா ஸமிதி, சேலம் | 193 |
| 14. | விவேகானந்தரின் சிந்தனைகள் | | 196 |
| 15. | அஞ்சாமை | சுவாமி அசலானந்தர் | 198 |
| 16. | செய்திகள் | | 200 |



| | | | | |
|---|---|---|---|---|
| வருட சந்தா: | உள்நாடு | ரூ. 15-00 | வெளிநாடு | ரூ. 35-00 |
| தனி இதழ் | ,, | ரூ. 1-50 | ,, | ரூ. 3-00 |


## அந்தர்யோக விவரங்கள்

**தென்ஆற்காடு ஜில்லா—ஏந்தலில் 20—5—83 வெள்ளிக்கிழமை**

இடம்: தொடக்கப்பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**வடஆற்காடு ஜில்லா—துரிஞ்சாபுரத்தில் 21—5—83 சனிக்கிழமை**

இடம்: புஷ்பகிரி ஸ்ரீ பாலசுப்பிரமணிய சுவாமி கோவில்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**தஞ்சை ஜில்லா—மயிலாடுதுறையில் 22—5—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: மஹாதானத்தெருவிலிருக்கும் தேசியத் துவக்கப்பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

[தொடர்ச்சி பின்பக்கம் பார்க்க]

## அந்தர்யோக விவரங்கள் (தொடர்ச்சி)

**வடஆற்காடு ஜில்லா—ஆம்பூரில் 22—5—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *அருள்மிகு நாகநாத சுவாமி ஆலய திருமண மண்டபம்*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**வடஆற்காடு ஜில்லா—குடியாத்தத்தில் 23—5—83 திங்கட்கிழமை**

*இடம்:* *வேதாந்தப் பாடசாலை*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா—தென்திருப்பேரையில் 29—5—83 ஞாயிறு**

*இடம்:* *அருள்மிகு கைலாசநாதர் திருக்கோவில்*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி திவ்யானந்தர்

**கோவை ஜில்லா—சித்திரச்சாவடியில் 5—6—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த ஆச்ரமம்*
*நேரம்:* *காலை 10 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
*உணவு வசதி:* *பகல் உணவு ரூ. 1-50; மாலை சிற்றுண்டி ரூ. 1-00 நேரில்செலுத்தவும்.*

**திருநெல்வேலி ஜில்லா—பாளையங்கோட்டையில் 5—6—83 ஞாயிறு**

*இடம்:* *மனகாவலம்பிள்ளை கல்யாண மண்டபம்*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா—கோவில்பட்டியில் 12—6—83 ஞாயிறு**

*இடம்:* *கடலையூர் ரோட்டிலுள்ள திருமுருகன் பப்ளிக் ஸ்கூல்*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**வடஆற்காடு ஜில்லா—வேலூரில் 12—6—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமம் (பாலாற்றின் தென்கரை பழைய பாலம் அருகில்)*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 5-00 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி சங்கரானந்தர்
*உணவு வசதி:* *மதிய உணவிற்கு ரூ. 1-50 செலுத்திப் பதிவு செய்துகொள்ளலாம்.*

---

*அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும், தாய்மார்களும் அந்தர்யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன்வரும் தாய்மார்களும், பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.*






प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

சக்கரம் 32 | ருத்ரோத்காரி ௵ வைகாசி ௴ | ஆரம் 5

## பிரார்த்தனை

अहमेवाव्ययोऽनन्तः शुद्धविज्ञानविग्रहः ।
सुखं दुःखं न जानामि (कथं कस्यापि वर्तते) ॥

— अवधूतगीता

*அஹமேவாவ்யயோ஽நந்த: சுத்த விக்ஞான விக்ரஹ: ।*
*சுகம் துக்கம் ந ஜானாமி ( கதம் கஸ்யாபி வர்ததே ) ॥*

*— அவதூதகீதை*

*நான் நிர்விகாரமாகிய தத்துவப் பொருள். வாலறிவின் தூயசொரூபம். நான் சுக துக்கங்களைக் கடந்தவன். இன்ப சொரூபி.*

நிறமுயர் கோலமும் பேரும் உருவும் இவைஇவை என்(று)
அற(ம்)முயல் ஞானச் சமயிகள் பேசிலும் அங்கங்கெல்லாம்
உறஉயர் ஞானச் சுடர்விளக்காய் நின்றதன்றி ஒன்றும்
பெறமுயன்றார் இல்லையால் எம்பிரான் பெருமையையே.

*— திவ்வியப்பிரபந்தம்*

# அருள் விருந்து



தீமைக்கு அஞ்சாதிருப்பவன் தீரன்.

தபஸ் ஒன்றே மனிதனுக்கு யாண்டும் நலன் தரவல்லது.

பிரார்த்தனை ஒன்றே மனிதனைப் புனிதவான் ஆக்கவல்லது.

வள்ளல் பணத்தை ஆள்கிறான்; பணமோ உலோபியை ஆள்கிறது.

சமுதாயத்தோடு நல்லிணக்கம் வைப்பதே சமய அனுஷ்டானமாகும்.

நலனிலோ கேட்டிலோ கட்டுப்படாது இருக்கிறவன் மேலோன் ஆகிறான்.

உன் மனது பாழ்படாதிருந்தால் நீ யாண்டும் இன்புற்றிருப்பது நிச்சயம்.

யாண்டும் அமைதியுற்றிருப்பவன் பரத்தை அடையத் தகுதியுடையவன் ஆகிறான்.

உன்னுடைய வாழ்க்கை நிலையை உனக்கு நலன் தரும் பாங்கில் மாற்றி அமைத்துக்கொள்.

மனிதனுக்குக் கல்வி ஆகு ஊழில் அலங்காரம்; அது அவனுக்குப் போகு ஊழில் பாதுகாப்பு.

இறைவனுடைய சான்னித்தியத்தை உள்ளத்தினுள்ளே யாண்டும் உணர்ந்திருப்பாயாக.

பாரமார்த்திகப் பெருவாழ்வே மனிதனுக்கு இம்மை, மறுமை ஆகியவைகளில் நலன் தரவல்லது.

எதைப் பெறத் தகுதியுடையவனாக மனிதன் இருக்கிறானோ அது தானாகவே அவனுக்கு வந்து அமைகிறது.

செயலை மனிதன் மதிப்புப் போடுகிறான்; ஆனால் இறைவனோ மனிதனுடைய மனப்பான்மையை மதிப்புப் போடுகிறார்.

மனச்சாட்சியின் போதனை அப்போதைக்கப்போது அமைகிறது. அது புரியும் நலன் யாண்டும் மனிதனுக்குத் தேவையானது.

இந்திரிய சுகம், தற்பெருமை, அநித்தியத்தில் பற்றுவைத்தல், பிரபஞ்ச வாழ்வில் மோகம் கொள்ளுதல் ஆகிய நான்கும் மனிதன் படுகிற துயரங்கள் அனைத்துக்கும் காரணங்களாகின்றன.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

பரமஹம்சதேவர் பலராமனுடைய மாளிகையில் பக்தர்களுடன் அமர்ந்துள்ளார்.

ஒரு பக்தர்: "ஐயன்மீர்! 'நவஹுல்' என்னும் பெயருடன் ஒரு சமயப்பிரிவு தோன்றி இருக்கிறது. லலித சட்டர்ஜி அதில் ஓர் அங்கத்தினராக இருக்கின்றார்."

பரமஹம்சதேவர்: "வெவ்வேறு சமயக் கொள்கைகள் இருக்கின்றன. அவைகள் யாவும் ஒரே லக்ஷியத்தை அடைவதற்குப் பல மார்க்கங்களாகின்றன. ஆனல் ஒவ்வொருவரும் தங்கள் கொள்கைதான் சரியானது என்று நம்புகின்றனர். ஒவ்வொருவனும் தன் கடிகாரமே சரியான நேரத்தைக் காட்டுகிறது என்று சொல்வதற்கு அது நிகராகும்."

மகேந்திரர்: "ஒவ்வொருவனும் தன் கடிகாரமே சரியான நேரத்தைக் காட்டுகிறது என்று நினைக்கின்றான். ஆனல் ஒவ்வொரு கடிகாரமும் காட்டுகின்ற நேரம் வித்தியாசப் படுகின்றது."

பரமஹம்சதேவர்: "கடிகாரங்கள் தவறான நேரங்களைக் காட்டலாம். ஆனல் சூரியன் காட்டுகின்ற நேரத்தில் தவறு நிகழாது. ஒவ்வொருவனும் சூரியனைப் பார்த்துத் தன் கடிகாரத்தைச் சரிசெய்துகொள்ள வேண்டும்."

ஒரு பக்தர்: "ஒருவர் ஏராளமான பொய் பேசுகின்றார். அது பொருந்துமா?"

பரமஹம்சதேவர்: "இக் கலியுகத்தில் சத்தியம் பேசுவதுதான் தவமாகிறது. இந்த யுகத்தில் மற்றத் தவநெறிகளைக் கடைப்பிடிப்பது கஷ்டமாகும். சத்தியத்தைக் கடைப்பிடிப்பவன் சத்திய சொரூபமாகின்றான். சத்தியம் வேறு கடவுள் வேறு அன்று. துளசிதாசர் பகர்வதாவது: 'சத்தியம், தெய்வத்தொண்டு, மாதர்களை அன்னை பராசக்தியாகப் பாவிப்பது ஆகியவை சிறந்த நற்பண்புகளாகின்றன. அவைகளை ஒருவன் கடைப்பிடிப்பதன் மூலம் தெய்வ சொரூபமாகின்றான். அப்படி அவன் தெய்வ சொரூபமாகாவிட்டால் நான் ஒரு பொய்யனுவேன்.'

"கேசவசந்திரசேனர் தம் தந்தையார் வைத்திருந்த கடன்களை எல்லாம் ஏற்றுக்கொண்டார். மற்றவர்களாகவிருந்தால் அக்கடன்களிலிருந்து விலகிக்கொள்வார்கள். நான் தேவேந்திரருடைய சமாதிக்குப் போயிருந்தேன். ஆங்குக் கேசவர் ஒரு மேடையின்மீது அமர்ந்து தியானம் செய்துகொண்டிருப்பதைப் பார்த்தேன். அப்பொழுது அவர் இளைஞனாக இருந்தார். மதுர்பாபுவிடம் நான் பகர்ந்ததாவது: 'இங்குத் தியானம் செய்கின்றவர்களுள் இந்த இளைஞனுடைய ஹிருதயம் என்னும் மிதவைதான் நீருக்குள் மூழ்குகிறது. ஆத்மா என்னும் மீன் அதைக் கவ்வுகிறது.'

"ஒரு மனிதன் இருந்தான். அவன் பெயரைச் சொல்ல நான் விரும்பவில்லை. நியாய மன்றத்தில் பத்தாயிரம் ரூபாய்க்காக ஒரு பொய் சொன்னன். அவன் தன்னுடைய வழக்கு வெற்றி அடைய வேண்டுமென்பதற்காக அன்னை பராசக்தியிடம் என்னைக் காணிக்கை செலுத்துமாறு செய்தான். அவன் என்னிடம் பகர்ந்ததாவது: 'தந்தையே, தயவு செய்து இந்தக் காணிக்கையை அன்னை பராசக்திக்குச் செலுத்துங்கள்.' நான் ஒரு குழந்தையைப் போன்று அவனுடைய பேச்சை நம்பி அம்பிகைக்குக் காணிக்கை செலுத்தினேன்."

பக்தர்: "அவன் உண்மையிலேயே கெட்டிக்கார மனிதனுகின்றான்."

பரமஹம்சதேவர்: "நான் அம்பிகைக்குக் காணிக்கை செலுத்தினல் அவனுடைய பிரார்த்தனையை அம்பிகை நிறைவேற்றி வைப்பாள் என்று அவன் நம்பினன். அவன் என்னிடத்தில் அத்தகைய நம்பிக்கை வைத்திருந்தான்."

லலிதாபாபுவைப் பார்த்து ஸ்ரீராமகிருஷ்ணர் பகர்ந்ததாவது: அகங்காரத்தை விடுவது எளிதன்று. "அகங்காரத்தை ஒழித்தவர்கள் மிகச் சிலரேயாவர். அவர்களுள் பலராம் ஒருவராவார். (அங்குள்ள பக்தர் ஒருவரைச் சுட்டிக் காட்டி) இவரும் அவர்களுள் ஒருவராவார். மற்றவர்கள் தங்களுடைய அந்தஸ்தைக் குறித்துக் கர்வம் மிகப்படைத்தவர்களாக

இருக்கின்றார்கள். அவர்கள் வெளிவேஷக் காரர்களாவார்கள். கல்வியைக் குறித்து அகங்காரம் கொண்டிருப்பவர்கள் இருக்கின்றார்கள். (பிராணகிருஷ்ணரைச் சுட்டிக்காட்டி) இந்தக் கொழுத்த பிராம்மணனிடம் கற்றவன் என்னும் அகங்காரம் சிறிது இருக்கிறது. (மகேந்திரரைப் பார்த்து) மகிம சக்கரவர்த்தி அனேக புத்தகங்கள் படித்திருக்கிறார் அல்லவா? அவரைப் பற்றி உனக்குத் தெரியுமா?''

மகேந்திரநாதர்: "ஆம், ஐயனே! அவரைப் படித்திருக்கின்றார்.''

பரமஹம்சதேவர்: (புன்சிரிப்புடன்) "அவரையும் கிரீஷ்சந்திரகோசரையும் சந்திக்கும்படி செய்ய வேண்டுமென்று நான் விரும்புகின்றேன். அப்பொழுது அவர்களுடைய சம்வாதத்தைச் சிறிது ரசிக்கலாம்.''

கிரீஷ்: (புன்சிரிப்புடன்) "சாதனையின் மூலம் எல்லா மக்களும் கிருஷ்ணனைப் போல் ஆகிவிடமுடியுமல்லவா?''

பரமஹம்சதேவர்: "முழுவதும் கிருஷ்ணன் போன்று ஆகாவிட்டாலும் கிருஷ்ணனுடைய சில அம்சங்களையாவது பெற்றுவிடலாம்.''

பக்தர்: "ஐயனே! எல்லாரும் கிருஷ்ணன் போன்று இருக்கமுடியுமா?''

பரமஹம்சதேவர்: "ஈசுவரனுடைய அவதாரம் அல்லது அவதார புருஷர்களின் பண்புகளைக் கொண்ட ஒருவர் ஈசுவரகோடி என்று அழைக்கப்படுகின்றார். சாதாரண மனிதனுக்கு ஜீவகோடி அல்லது ஜீவன் என்று பெயர். இடைவிடாத சாதனத்தால் ஜீவன் ஈசுவர சாக்ஷாத்காரம் அடையலாம். ஆனால் ஜீவன் சமாதி அடைந்துவிட்டால் அவன் பிரபஞ்ச நிலைக்குத் திரும்பி வருவதில்லை.

"ஈசுவரகோடி அரசகுமாரன் போன்றவன் ஆகின்றான். ஏழு அடுக்குக் கொண்ட அரண்மனையிலுள்ள அறைகளுக்கெல்லாம் உரிய சாவிகள் அரச குமாரனிடத்தில் இருக்கும். அவன் எம்மாளிகைக்கு வேண்டுமென்றாலும் தன் விருப்பம்போல் ஏறிச் செல்லலாம் அல்லது இறங்கி வரலாம். ஆனால் ஜீவகோடி ஒரு சாதாரண உத்தியோகஸ்தனவான். அவன் அரண்மனையிலுள்ள சில குறிப்பிட்ட அறைகளுக்குள்தான் நுழைய முடியும். அவனுடைய அதிகாரத்துக்கு வரம்பு உண்டு.

"ஜனகர் ஒரு ஞானியாவார். அவர் சாதனையின் மூலம் ஞானத்தைப் பெற்றார். சுகதேவரும் ஒரு ஞானியாவார். ஆனால் அவர் ஞானத்தின் வடிவமாகவே இருந்தார்.''

கிரீஷ்: "அப்படியா!''

பரமஹம்சதேவர்: "சுகதேவர் ஞானம் பெறுவதற்குச் சாதனை எதுவும் செய்யவில்லை. சுகதேவர் போன்று நாரதரும் ஞானம் பெற்றிருந்தார். ஆனால் நாரதர் மக்களுக்குப் போதிக்கும் பொருட்டுத் தம்மிடம் பக்தியையும் வைத்திருந்தார். 'நான் பிரம்மம்' என்ற பாவனை சில சமயம் பிரகலாதனிடம் இருந்தது. இன்னும் சிலசமயம் பிரகலாதன் 'நான் ஈசுவர தொண்டன்' என்னும் பாவனையைப் பெற்றிருந்தான். இன்னும் சிலசமயம் 'நான் ஈசுவரனுடைய குழந்தை' என்னும் பாவனையைப் பெற்றிருந்தான். பிரகலாதன் பெற்றிருந்த மனோ பாவனைகளை எல்லாம் அனுமானும் பெற்றிருந்தான்.

"அத்தகைய உன்னத நிலையை அடைய வேண்டுமென்னும் விருப்பம் எல்லாருக்கும் இருக்கலாம். ஆனால் எல்லாரும் அந்நிலை அடைய முடிவதில்லை. சில மூங்கில்கள் உள்ளே ஒன்றுமில்லாத ஓட்டை மூங்கில்களாக இருக்கின்றன. சில மூங்கில்கள் ஓட்டையில்லாத கெட்டி மூங்கில்களாக இருக்கின்றன. ஓட்டை மூங்கில்கள் போன்று சிலர் உறுதிப்பாடு அற்றவர்களாக இருக்கின்றார்கள். கெட்டி மூங்கில்கள் போல உறுதிப்பாடே வடிவெடுத்தவர்களாகச் சிலர் இருக்கின்றார்கள்.''

பக்தர்: "ஐயன்மீர், உங்களுடைய ஆன்மீக அனுபவங்களைப்பற்றிக் கூறுங்கள். மற்றவர்களுக்கு அவை முன்மாதிரியாக இருக்கின்றன. நாங்கள் என்ன செய்யவேண்டும் என்பதை எங்களுக்கு எடுத்து உரையுங்கள்.''

பரமஹம்சதேவர்: "கடவுள் சாக்ஷாத்காரம் பெற வேண்டுமென்று நீ விரும்பினால் அந்தக்கரணம் ஆழ்ந்த துறவு நிலையைப் பெற்று வரவேண்டும். உன் சாதனைக்குத் தடையாக இருக்கிறது என்று எதை உணர்கின்றாயோ அதை உடனே துறந்துவிட வேண்டும். பின்னால் பார்த்துக்கொள்ளலாம் என்று

நீ இருக்கக்கூடாது. பெண் ஆசையும், பொன் ஆசையும் சாதனைக்குப் பெரிய தடைகளாக இருக்கின்றன. மனது அவைகளினின்று முற்றும் விலகி இருக்கவேண்டும்.

"ஒருவன் மந்தபுத்தி உடையவனாகவோ சோம்பேறியாகவோ இருக்கக் கூடாது. ஒரு மனிதன் குளிப்பதற்குச் சென்றான். அவன் தோளில் துண்டு ஒன்றைப் போட்டிருந்தான். அவன் மனைவி அவனிடம் பகர்ந்ததாவது: 'நீங்கள் ஒன்றுக்கும் உதவாதவர்களாக இருக்கிறீர்கள். உங்களுக்கு வயது வளர்ந்து கொண்டே வருகிறது. வயதாகியும் சில இயல்புகளை விட முடியாதவராக இருக்கிறீர்கள். மனைவியை விட்டு ஒருநாளும் நீங்கள் வாழ்ந்திருக்க முடிவதில்லை. ஆனால் பக்கத்து வீட்டு மனிதரைப் பாருங்கள். அவர் நாளுக்கு நாள் குடும்பப் பந்தத்தை விட்டு விலகிக் கொண்டிருக்கிறார்.'

அதற்குக் கணவன் பகர்ந்ததாவது: 'என்ன! அவன் பிரமாதமான காரியம் எதைச் செய்து விட்டான்? நீ அதை எனக்குச் சொல்.'

அதற்கு மனைவி பகர்ந்ததாவது: 'அவருக்குப் பதினாறு மனைவிகள் இருக்கின்றார்கள். ஒவ்வொரு மனைவியிடமிருந்தும் அவர் விலகிக் கொண்டிருக்கிறார். நீங்கள் ஒரு மனைவியை விட்டு விலக முடியாதவராக இருக்கிறீர்கள்.'

அதற்குக் கணவன் பகர்ந்ததாவது: 'நீ ஒரு பைத்தியக்காரி. ஒவ்வொரு மனைவியாக விட்டு விலகுகின்றவன் ஒருநாளும் துறவியாகமாட்டான். துறவியாக விரும்புபவன் ஒவ்வொருவராக விட்டு விலகிக்கொண்டிருப்பானா?' மனைவி புன்சிரிப்புடன் பகர்ந்ததாவது: 'ஒவ்வொரு மனைவியாக விட்டு விலகினாலும் உங்களைவிட அவர் சிறந்தவர்தானே?' கணவன் அதற்குப் பகர்ந்ததாவது: 'நீ ஒரு பேதையாக இருக்கின்றாய். துறவைப்பற்றி நீ அறிந்துகொள்ளாதவளாக இருக்கின்றாய். அவன் ஒருநாளும் துறவியாகமாட்டான். நான் துறவியாக முடியும். இதோ பார், இப்பொழுதே நான் துறவியாகப் போகின்றேன்' என்று கூறி அக்கணமே வீட்டைவிட்டுக் கிளம்பிப் போய்விட்டான்."

பரமஹம்சர் மேலும் பகர்ந்ததாவது: "அந்த மனிதனுடைய துறவுதான் ஆழ்ந்த துறவாகும். விவேகம் வந்தவுடன் அவன் வீட்டைவிட்டு வெளியேறிவிட்டான். அவன் தோளில் போட்டிருந்த துண்டோடு சென்றுவிட்டான். பிறகு அவன் வீட்டுக் காரியங்களைப்பற்றி நினைக்கவே இல்லை. வீட்டுப் பக்கம் அவன் திரும்பவே இல்லை. துறவியாக விரும்புகிறவனுக்கு மன உறுதிப்பாடு வேண்டும். ஒரு கொள்ளைக்காரனுடைய மனத்தைரியம் வேண்டும். ஒரு வீட்டைக் கொள்ளை அடிப்பதற்கு முன்பு 'கொல்லுங்கள், கொள்ளை அடியுங்கள்' என்று சப்தம் போடுவான். அங்ஙனம் துறவி ஒருவன் மனதிலுள்ள கேடுகளை எல்லாம் ஒழித்துத்தள்ள வேண்டும்.

"பரமனிடத்தில் பக்தியை வளர்ப்பதில் உன் வாழ்நாளைப் பயன்படுத்து. பக்தியை வளர்ப்பதைவிட நீ என்ன செய்யமுடியும்? யசோதையை விட்டுக் கிருஷ்ணன் பிரிந்து போனபொழுது யசோதை கண்ணனுடைய பிரிவினால் பித்துப் பிடித்தவளாகிவிட்டாள். யசோதை அங்நிலையில் ராதையைச் சென்று பார்த்தாள். யசோதையினுடைய துயரம் ராதையினுடைய மனதை உருக்கிவிட்டது. ராதை பகர்ந்ததாவது: 'குழந்தாய்! என்னிடம் வரம் ஒன்று கேட்டுப் பெற்றுக்கொள்.' யசோதை அதற்குப் பகர்ந்ததாவது: 'அம்மா! என்னுடைய மனோ வாக்குக் காயங்களினால் கிருஷ்ணனுக்கு நான் பணிவிடை செய்யுமாறு அருள் புரியுங்கள். அதைத் தவிர வேறு எதை நான் கேட்கப் போகின்றேன்? என்னுடைய கண்களினால் கிருஷ்ணனுடைய பக்தர்களைக் காணுமாறு அருள்புரியுங்கள். கிருஷ்ணனுடைய லீலை எங்கு நிகழ்கிறதோ அந்த இடத்துக்கு என்னுடைய கால்களால் செல்ல அனுக்ரஹம் செய்யுங்கள். என்னுடைய கைகளைக்கொண்டு கிருஷ்ணனுக்கும் அவனுடைய பக்தர்களுக்கும் நான் பணிவிடை செய்ய அருள்புரியுங்கள். என்னுடைய பொறிகள் ஐந்தையும் கிருஷ்ணனுடைய பணிவிடையிலேயே ஈடுபடுத்த அருள்புரியுங்கள்."

இங்ஙனம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே அவருடைய உள்ளம் பிரபஞ்ச உணர்ச்சியைக் கடந்து பரவச நிலைக்குச் சென்று கொண்டிருந்தது.

---

# எந்நாள் கண்ணி

(தாயுமானவர் இயற்றியது)

9-5. அண்டருக்கும் எய்ப்பில்வைப்புதும்
ஆர்அமுதை என்அகத்தில்
கண்டுகொண்டு நின்று களிக்குநாள் எந்நாளோ.

உயிர்கள் யாண்டும் இன்பத்தையே நாடி ஓடுகின்றன. அவ்வின்பத்தைப் புறவுலகில் தேடி அலைகின்றன. புறவுலகில் பெறும் இன்பம் ஒவ்வொன்றிற்கும் துன்பம் என்னும் விலை கொடுத்தாக வேண்டும். தினையளவு இன்பம் பெறுவதற்குப் பனையளவு துன்பத்தை அனுபவித்தாக வேண்டும். மக்கள்நிலை வரையில் உயிர்கள் இன்ப துன்பங்களை மாறி மாறி அனுபவித்து வருகின்றன. துன்பமில்லாது இன்பத்தையே அனுபவிப்பவர்கள் தேவர்கள் எனப்படுகின்றார்கள். புண்ணிய கர்மத்தின் விளைவு இன்பம் ஆகும். பாப கர்மத்தின் விளைவு துன்பம் ஆகும். உயிர்கள் தாம் செய்த புண்ணியத்தைத் தெய்வப் பிறப்பு எடுத்து அனுபவித்து வருகின்றன. புண்ணியத்தின் பயனை அனுபவித்ததும் தேவநிலையை விட்டுக் கீழிறங்கியாக வேண்டும். எனவே தேவர்கள்அனுபவிக்கும் இன்பத்துக்கும் முடிவு உண்டு. அது சாசுவதமானதன்று. என்றைக்கும் அழியாத இன்ப நிலையைத் தருவது அமிர்தம் எனப்படுகிறது.

அமிர்த நிலை அல்லது சாகா நிலை என்பது தான் முடிந்த நிலையாகும். தேவர்களும் அம் முடிந்த நிலையை அடைந்தாகவேண்டும். அம் முடிந்த நிலையை அடையும் வரையில் அவர்களுக்கு உதவி தேவைப்படுகிறது. முடிந்த நிலையை அடைந்துவிட்டால் உதவி எதுவும் தேவையில்லை. அம்முடிந்த நிலையை அமிர்தம் என்றும், பேரின்பநிலை என்றும், முக்திநிலை என்றும், சச்சிதானந்தம் என்றும் பகர்கிறோம்.

மனிதனுக்கும் கீழ்நிலையில் உள்ள உயிர்கள் மானுடநிலையை எட்டுவதற்கு முயல்கின்றன. மானுடநிலையை எட்டிய உயிர்கள் தேவநிலைக்குப் பாடுபடுகின்றன. தேவர்கள் நிலையில் இருப்பவர்கள் அழியாப் பெருநிலையாகிய அகண்டநிலையை அடைந்தாகவேண்டும். அந்நிலையை அடைகிறபொழுதுதான் நிரந்தரப் பாதுகாப்புக்கிடைக்கிறது. தேவர்கள் நிலைக்கு மேலாக இருக்கும் அப்பெருநிலையைப் புறவுலகில் தேடிப் பெறமுடியாது.

நம் அகத்தில் அப்பெருநிலை அமைந்திருக்கிறது. நம் மனதிலுள்ள அழுக்கு அதை மறைத்து வைத்துக் கொண்டிருக்கிறது. மனதைத் தூய்மைப்படுத்தி அதை உள்முகமாகத் திருப்புகின்றவர்கள் அப்பெரு நிலையைக் கண்டு பேரானந்தம் அடைகின்றார்கள். மனதைப் புறத்தில் போக விட்டு உலக சுகங்களையும், உடல் சுகத்தையும் அனுபவிக்கின்றவர்கள் மனதிலுள்ள அப்பெரு நிலையை அறியாதவர்களாக இருக்கின்றார்கள். அழியாப் பெருநிலையாகிய பேரின்பநிலை அகத்தே அமைந்திருக்கிறது என்று அறிகின்றவரையிலும் மனிதன் அல்லல்பட்டாக வேண்டும். தான் எத்தனை நாளைக்குத் துன்பத்தை அனுபவிப்பது என்று மனிதன் கேட்கின்றான். தன் அகத்திலுள்ள அப்பேரின்ப அமிர்த நிலையைத் தரிசிக்கின்றவரையிலும் துன்பப்பட்டாக வேண்டும் என்பதுதான் அதற்குரிய விடையாகும். உடலுக்கு அழிவு வரும். அவ் அழிவை மரணம் என்கின்றோம். ஆனால் அது எப்பொழுது வரும் என்று நமக்குத் தெரியாது. அதனால் உள்ளத்திலிருக்கும் அமிர்த நிலையை மரணம் வருவதற்கு முன்பே நாம் அறிந்து விடவேண்டும். அதை அறிந்துவிட்டால் உடலுக்கு வரும் அழிவைக் குறித்து நாம் கவலைப்படவேண்டியதில்லை.

மனிதன் அற்ப உலக சுகத்தைப் பெறுவதற்குப் படாத பாடுபடுகின்றான். ஆனால் அவனிடத்திலுள்ள அழியாப் பெருநிலையை அடைவதற்கு அவன் முயல்வதில்லை. அருளாளர்கள் உள்ளிருக்கும் ஆனந்த நிலையைப் பெறுவதற்கு அல்லும் பகலும் அயராது உழைத்து வருகிறார்கள். உள்ளத்திலிருக்கும் அமிர்தப் பொருளைத் தரிசித்து ஆனந்தம் அடைவது எந்நாளோ என்று ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள். அருளாளர்கள் கூட்டத்தில் தாயுமானவரும் ஒருவராகையால் 'என் அகத்தில் இருக்கும் ஆரமுதைக் கண்டு நின்று களிக்கும் நாள் எந்நாளோ' என்று ஏங்குகிறார். அழியாப் பெருநிலையை

அடைவது நம் குறிக்கோள் என்பதை இக் கண்ணி நமக்குப் புகட்டுகின்றது.

**9-6. காட்டும் திருஅருளே கண்ணாகக் கண்டுபர வீட்டுஇன்ப மெய்ப்பொருளை மேவுநாள் எந்நாளோ.**

சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோதானம், அருளல் என்னும் ஐந்தொழில்கள் இறைவ னுக்கே உரியனவாகின்றன. இவ் ஐந் தொழில்களையும் செய்யும் சக்திகளுக்கு மாயை என்பது பொதுப் பெயராகும். இறைவனிடத் திலுள்ள சக்திக்கு மாயை என்று பெயர். மாயையின் துணைகொண்டு இவ்வுலகை உண்டுபண்ணி நிலைத்திருக்கச் செய்து பிறகு அழிக்கின்ற செயலை இறைவன் விளையாட்டா கச் செய்து வருகின்றார். திரோதானம் என் பது மறைப்புச் சக்தியாகும். ஈசனை நமக்கு மறைத்து வைத்திருக்கின்ற சக்தி அவரிடத்தி லுள்ள திரோதானச் சக்தியாகும். நம் உள்ளத் திலுள்ள ஆத்ம சொரூபத்தை மறைத்து வைத் திருக்கும் திரோதானச் சக்திக்கு அக்ஞானம் என்று பெயர்.

திரோதானச் சக்தியின் ஆதிக்கம் இருக்கும் வரையில் நாம் ஈசனைக் காணமுடியாது. திரோதானச் சக்தியால் நாம் இவ்வுலகைக் கண்டு வருகிறோம். இவ்வுலக இன்பங்களை யும் இவ்வுலக அறிவையும் ஈசனிடத்திலுள்ள திரோதானச் சக்தியின் உதவியைக் கொண்டு பெற்று வருகின்றோம். திரோதானச் சக்திக்கு வசப்பட்டிருக்கின்ற நாம் மயக்க நிலையில் இருக்கின்றோம். உலகைச் சாசுவதமானது என்று எண்ணி உலகவாழ்வில் தீவிரமாகக் கருத்துச் செலுத்தி வருகின்றோம். உலகத்தை உலகமாகக் கண்டு அதை அனுபவிப்பதுதான் லட்சியம் என்று நினைக்கின்றோம். ஈசன் கற்ப தருவாக இருந்து நமக்கு வேண்டியதை வேண்டியவாறு கொடுத்து வருகின்றார். உலக போகத்தையும், உலக வாழ்வையும் நாம் விரும்பிக் கேட்கின்றபொழுது அவர் அவற்றை நமக்குத் தருகின்றார்.

உலக வாழ்விலிருந்து விடுபட்டு அவருடைய உண்மையான சொரூபத்தைக் காண விரும்பும் பொழுது அவர் அருள்கூர்ந்து தம் உண்மை சொரூபத்தைக் காட்டித் தருகின்றார். அவரு டைய மறைப்புச் சக்திக்கு வசப்பட்டிருக்கின்ற நாம் அவருடைய அருளை அறியாதவர்களாக இருக்கின்றோம். தாய் ஒருத்தி கவர்ச்சிகர மான விளையாட்டுப் பொம்மைகளைத் தன் குழந்தையிடம் தந்து குழந்தை தன்னை மறந்திருக்கும்படி செய்கின்றாள். குழந்தை விளையாட்டுப் பொம்மையின் கவர்ச்சியில் ஈடுபட்டுத் தாயை மறந்து விளையாட்டுப் பொம் மைகளை வைத்துச் சிறிது நேரம் விளையாடு கின்றது. பசி வரும்பொழுது குழந்தைக்குத் தாயின் நினைவு வருகிறது. அது 'அம்மா, அம்மா' என்று அழ ஆரம்பிக்கிறது. தாய் வீட்டுக்குள் காரியத்தைப் பார்த்துக்கொண்டே 'அழகான பொம்மை இருக்கிறது பார். கண்ணே! அதை வைத்து விளையாடு' என்று ஆறுதல் கூறுகின்றாள். குழந்தை தாயின் சொல்லைக் கேட்காது 'அம்மா, நீதான் வேண் டும்' என்று உரக்க அழ ஆரம்பிக்கிறது. தாய் தன் வேலையை நிறுத்திவிட்டுக் குழந்தையைத் தூக்கி மடியில் வைத்துக்கொண்டு பாலூட்டு கின்றாள். நாம் எப்பொழுது அக் குழந்தை போன்று ஈசன்தான் வேண்டுமென்று அழுகின் றோமோ அப்பொழுதுதான் அவர் தம் உண் மையான சொரூபத்தை நமக்குக் காட்டுகின் றார். உலகமாகிய விளையாட்டுப் பொம்மையின் கவர்ச்சிக்கு உட்பட்டு நாம்உலகத்தில் உழன்று கிடக்கும்பொழுது அவர் தம்மை நமக்குக் காட் டாது நம்மிடமிருந்து மறைந்து இருக்கின்றார். உலகப் பொருள் வேண்டுமென்று குடம் குட மாகக் கண்ணீர் உகுத்து அழ ஆயத்தமாக நாம் இருக்கின்றோம். கடவுள் காட்சி கிட்ட வில்லையே என்று வருந்தி நாம் யாராவது ஒரு சொட்டுக் கண்ணீர் விடுகின்றோமா? அருளா ளர்கள் நிலை நம் நிலைக்கு முற்றும் மாறானது. அருளாளர்கள் உலக சுகத்தைத் துச்சமென ஒதுக்கித் தள்ளிவிட்டு மெய்ப்பொருள் இன் பத்தைப் பெறவே ஏங்கிக்கொண்டிருக்கிறார் கள். தாயுமானவர் உள்ளமும் மெய்ப்பொருள் இன்பத்தைப் பெறத் துடித்துக்கொண்டிருந் தது. 'உலகத்தை ஒதுக்கித் தள்ளிவிட்டு, ஈசா! உம் அருளை நாடி உம்முடைய உண்மை யான சொருபத்தை அனுபவித்து இன்புற் றிருக்கின்ற நாள் என்று வருமோ' என்று தாயு மானவர் இக்கண்ணியில் ஏங்குகின்ற நிலை யைக் காண்கின்றோம்.

---

# நடிப்பது பண்பாடாகாது

(சுவாமி விவேகானந்தர்)

நம் மக்கள் நலம் தரும் மக்கள் ஆட்சி ஒன்றை விரும்புகின்ற அறிகுறிகள் இருக்கின்றன. தங்களுடைய வாழ்க்கைத் தேவைகள் பூர்த்தி செய்யப்படவேண்டுமென்றும், வேலை குறைவாக இருக்க வேண்டுமென்றும், யாரும் கொடுமைப்படுத்தப்படலாகாது என்றும், சண்டை இருக்கக் கூடாதென்றும், அதிக உணவு வேண்டுமென்றும் மக்கள் கேட்கப் போகிறார்கள். மக்களின் ஆன்ம நலனையும், ஆன்மிகத்தையும் அடிப்படையாகக் கொண்டு அமையாத எந்த நாகரிகமும் நிலைத்து நிற்கும் என்று சொல்ல முடியாது. ஆன்ம ஞானம் தான் துன்பத்தை நிரந்தரமாகப் போக்கக்கூடியது. மற்ற உலகியலறிவு சிறிது காலத்துக்குத்தான் நம் தேவைகளைப் பூர்த்தி செய்து நம்மைத் திருப்திப்படுத்தும்.

அறம், பொருள் இன்பம், விடு என்பன நான்கும் புருஷார்த்தங்கள் என்று சொல்லப் படுகின்றன. அந்நான்கையும் பெறுவதற்கு மக்கள் ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. பாமர மக்களினுடைய வழிபாட்டு முறைக்குக் குந்தகம் விளைவிக்காது அவர்களை முன்னேற்ற முயலவேண்டும். இதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

மற்றுமொரு விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். பிறரைப் போன்று நடிப்பது பண்பாடாகாது. பிறரைப் போல நடிப்பது கோழைத்தனமாகும். பிறரைப்போல நடிப்பது நம் முன்னேற்றத்துக்கு எவ்வித நலனையும் தந்துவிடாது. அப்படி நடிப்பதானது பயங்கரமான வீழ்ச்சியை நம்மிடத்துத் தோற்றுவிக்கும். பிறரிடம் இருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டிய பாடங்கள் ஏராளமாக இருக்கின்றன. பிறரிடமுள்ள நல்லனவற்றைக் கற்றுக்கொள்ள மறுக்கின்றவன் வாழ்பவனாகக் கருதப்படமாட்டான். பிறரிடமுள்ள நல்லனவற்றையெல்லாம் கற்று அவற்றை நடைமுறைக்குக் கொண்டு வந்து அவற்றை நம் மயமாக்கிக்கொள்ள வேண்டும். ஆனால் மற்றவர்களாக ஆகிவிட வேண்டுமென்று பாசாங்கு செய்யாதீர்கள். இந்திய வாழ்க்கை முறையிலிருந்து பிசகிப் போய் விடாதீர்கள். வேறு நாட்டு மக்களைப் போன்று இந்திய மக்கள் உண்டும் உடுத்தும் வாழ ஆரம்பித்தால் இந்தியாவுக்கு நன்மை ஏற்பட்டு விடுமென்னும் எண்ணத்தை அறவே மறந்து விடுங்கள்.

பண்டைய இந்தியாவைச் சற்றுத் திரும்பிப் பாருங்கள். பழைய இந்தியப்பண்பாடு என்னும் ஊற்றிலிருந்து வந்துகொண்டிருக்கும் புனித நீரைப் பருகுங்கள். அப்பண்பாட்டையெல்லாம் எதிர்கால முன்னேற்றத்துக்குப் பயன்படுத்துங்கள். அப்பண்பாட்டில் ஊறி முன்னேறிச் சென்று இதுவரையில் இல்லாத அளவு மிகப்பெரிய அளவில் இந்தியாவை ஒளிபொருந்திய உன்னதமான நாடாக உருவாக்குங்கள்.

கடந்த நூற்றாண்டுகளாகக் கொண்டு வரப்பட்டுள்ள சீர்திருத்தங்கள் வெகு அலங்காரமானவைகளாக இருக்கின்றன. ஒவ்வொரு சீர்திருத்தமும் எல்லாருக்கும் பயனளிப்பதாக இல்லை. விதவை விவாகம் என்ற சீர்திருத்தத்தை எடுத்துக் கொண்டால் இந்திய மாதர்களில் எழுபத்தைந்து சதவிகிதத்தினருக்கு அது சம்பந்தப்படாததாக இருக்கிறது. இம்மாதிரியே சீர்திருத்தங்கள் யாவும் கல்வி கற்றுள்ள மக்களுக்குச் சாதகமாகவே இருக்கின்றன. பாமரமக்களுக்கு அச்சீர்திருத்தங்களால் பயனில்லை. சுயநலமாக அமையும் பிரச்னைகளைத் தீர்ப்பது சமுதாயச் சீர்திருத்தமாகாது. சீர்திருத்தங்கள் எல்லாரையும் முன்னேற்றுவதாக அமைய வேண்டும். சமுதாயத்தில் கல்வி கற்று உயர்ந்த ஜாதி மக்களாகக் கருதப்படுபவர்கள் பாமர மக்களின் பணத்தைக்கொண்டு கல்வி கற்றிருக்கிறார்கள். எனவே பாமர மக்கள் முதலில் கவனிக்கப்பட வேண்டியவர்களாகிறார்கள். சீர்திருத்தம் எதுவாயினும் அது பாமர மக்களின் நலனையும், முன்னேற்றத்தையும் அடிப்படையாகக்கொண்டு அமைய வேண்டும். அப்படி அமையாதவை பெயரளவுக்குச் சீர்திருத்தங்களேயல்லாமல் நலம் தரும் சீர்திருத்தங்களாகமாட்டா.

---

# பராக்கிரமம் படைத்திரு

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1981ல் திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவன நவராத்திரி விழாவில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[133ஆம் பக்கத் தொடர்ச்சி]

கண்ணன் பிறந்த விருஷ்ணி வமிசத்தினர் தற்பெருமையிலும், சுகபோகத்திலும் ஈடுபட்டிருந்தார்கள். அக்காலத்தில் துவாரகைக்கு இரண்டு ரிஷிகள் வந்தார்கள். அந்த ரிஷிகளைப் பரிகாசம் செய்கின்ற முறையில் துவாரகை மக்கள் நடந்துகொண்டார்கள். ஆண் ஒருவனுக்குப் பெண்வேடம் போட்டார்கள். வயிற்றில் துணியை வைத்துக் கர்ப்பிணியின் வயிற்றைப் போன்று பெரிதாக்கினார்கள். பெண்வேடத்தில் கர்ப்பிணிபோன்றிருந்தவனை அந்த ரிஷிகளுக்குக் காட்டி "இவளுக்கு ஆண் குழந்தை பிறக்குமா? பெண்குழந்தை பிறக்குமா?" என்று கேட்டார்கள். "அவள் வயிற்றிலிருப்பது உங்கள் எல்லாரையும் அடித்துக்கொல்லும்" என்று ரிஷிகள் சாபமிட்டார்கள். துவாரகை மக்கள் தங்களுக்கு நேர்ந்த சாபத்தை எண்ணித் துயரமடைந்தார்கள். வயிற்றில் வைத்திருந்த துணிக்கு நெருப்பு வைத்துக் கொளுத்தினார்கள். துணிக்குள் இருந்த இரும்புத்துண்டைத் துகள் செய்து துகளைச் சமுத்திரக்கரையில் தூவினார்கள். சமுத்திரக்கரையில் அத்துகள்கள் கோரைகளாக முளைத்தன. அந்த இரும்பின் ஒரு சிறு துண்டை ஒரு வேடன் அம்பின் நுனியில் வைத்திருந்தான். விருஷ்ணி வமிசத்தைச் சேர்ந்தவர்கள் ஒரு சமயம் வனபோஜனத்துக்குச் சமுத்திரக் கரைக்குச் சென்றார்கள். ஆங்கு ஏராளமாக மது அருந்தினார்கள். அவர்களுக்கிடையில் சண்டை மூண்டுவிட்டது. சமுத்திரக் கரையிலிருந்த கோரைகளைப் பிடுங்கிக் கொண்டு ஒருவருக்கொருவர் அடித்துக் கொண்டு அத்தனைபேரும் அழிந்துபோனார்கள். கிருஷ்ணனுக்கு அந்தியகாலம் வந்தபொழுது புல்தரையில் கால்மேல் கால் போட்டுக்கொண்டு தியானத்தில் இருந்தார். பசுமையான புல்தரையில் அவர் அமர்ந்திருந்தது எட்ட இருந்து பார்ப்பவர்களுக்கு மான் படுத்திருந்தது போன்றிருந்தது. கிருஷ்ணன் பாதத்தைத் தவிர வேறு எந்த இடத்திலும் ஆயுதம்கொண்டு தாக்கி அவரைக் கொல்ல முடியாது. அவர் அமர்ந்திருந்தபொழுது அவர் பாதம் ஒரு மான் தலைபோன்று ஒரு வேடனுக்குத் தெரிந்தது. உடனே அப்பாதத்தைப் பார்த்து அவன் அம்பு எய்தான். கிருஷ்ணன் உடலை உகுத்தார். இப்படித் தாமும் யாதவ குலமும் அழிந்து போவதை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டது அவர் பெற்றிருந்த வீரியமாம்.

பாண்டவர்கள் அபிமன்யுவின் செல்வனான பரீக்ஷித்துக்குப் பட்டம் கட்டிவிட்டுச் சொர்க்கத்துக்குப் புறப்பட்டார்கள். பாண்டவ சகோதரர்கள் ஐவரும், அவர்களைத் தொடர்ந்து திரௌபதியும், கடைசியாக ஒரு நாயும் வட திசையை நோக்கிப் போனார்கள். அப்படி அவர்கள் போய்க்கொண்டிருக்கையில் முதலில் திரௌபதி கீழே விழுந்து மாண்டுபோனாள். இச்செய்தி தர்மரிடம் தெரிவிக்கப்பட்டது. அப்பொழுது தர்மர் திரும்பிப்பாராது கூறியதாவது: "திரௌபதி ஐவருக்கு மனைவியாக அமைந்திருந்தும் அவள் தன் மனதை ஐவரிடமும் சமமாக வைக்காது அர்ஜுனனிடத்தில் அலாதியாக அபிமானம் வைத்திருந்தாள். அக்குற்றத்திற்காக அவள் சரீரம் இங்கேயே விழுந்துவிட்டது" என்றார். இன்னும் சிறிது தூரம் சென்றதும் சகாதேவன் விழுந்து மடிந்தான். இச்செய்தியும் தர்மரிடம் சொல்லப்பட்டது. அப்பொழுதும் அவர் திரும்பிப் பாராது பகர்ந்ததாவது: "சகாதேவனுக்குச் சாஸ்திர அறிவு அதிகம் இருந்ததனால் அவனுக்குக் கல்விச் செருக்கு இருந்தது. ஆகையினால் அவன் சரீரம் சொர்க்கத்துக்கு வராது இங்கேயே விழுந்துவிட்டது" என்றார். இன்னும் சிறிது தூரம் சென்றதும் நகுலன் கீழே விழுந்து இறந்தான். நகுலன் இறந்த செய்தியை யுதிஷ்டிரரிடம் சொன்னபொழுது அப்பொழுதும் திரும்பிப்பாராது அவர் பகர்ந்ததாவது: "நகுலனுக்கு உடலழகில் தன்னைவிட அழகானவர்கள் யாருமில்லை என்ற

செருக்கு இருந்தது. அதனல் அவன் சரீரமும் சொர்க்கத்துக்கு வராது இங்கேயே விழுந்துவிட்டது.'' இன்னும் சிறிது தூரம் சென்றதும் அர்ஜுனன் விழுந்து இறந்தான். அர்ஜுனனும் விழுந்து இறந்துவிட்டான் என்று பீமன் சொன்னன். தர்மர் திரும்பிப் பார்க்காது பகர்ந்ததாவது: ''இறைவனுடைய திட்டத்தில் எல்லாருக்கும் வேலை இருக்கிறது. ஆனல் அர்ஜுனன் முதலில் தான் ஒருவனுகவே இருந்து எதிரிகள் யாவரையும் வெல்லவேண்டுமென்ற தற்பெருமை கொண்டிருந்தான். இப்படி அவன் எண்ணியது தர்மத்திலிருந்து பிசகியது ஆகும். எனவே அவன் சரீரமும் இங்கே விழுந்தது.''

சிலர் விட்டு வேலைகள் அனைத்தையும் தாங்களே செய்வார்கள். தக்கவர்களுக்குப் பயிற்சி தரமாட்டார்கள். அவர்கள் இறந்த பிறகு அவர்களிடமிருந்து பெட்டிச்சாவியை எடுத்துத்தான் பெட்டியைத் திறக்கவேண்டும். இப்படி வாழ்கின்றவர்கள் சரியாக வாழ்கின்றவர்களல்லர். ஒவ்வொரு காரியத்திற்கும் அக்காரியத்தைச் செய்வதற்குத் தக்கவருக்குப் பயிற்சி கொடுத்து அவரிடம் அதை ஒப்படைக்கவேண்டும். இதைச் செய்யாவிட்டால் தர்மத்தினின்றும் பிசகியவர்களாகின்ருேம். மகன் வாழ்க்கை அனுபவம் பெறப் பெற அவனிடம் பொறுப்பை ஒப்படைக்க வேண்டும். பொறுப்பற்றவனுக இருக்கும்படி அவனை வைத்திருக்கக்கூடாது. இதைத் தாய் தந்தையர்கள் அறிந்திருக்க வேண்டும்.

இன்னும் சிறிது தூரம் சென்றதும் கடைசியாகப் பீமன் 'நான் விழுகின்றேன்' என்று கூறிக் கீழேவிழுந்து உயிர் துறந்தான். தர்மர் அதைக் கேட்டும் திரும்பிப்பாராது போய்க் கொண்டே தமக்குத் தாமே சொல்லிக் கொண்டதாவது: ''சரீர பலத்தில் தனக்கு நிகரானவர்கள் யாருமில்லை என்ற செருக்கு பீமனுக்கு இருந்தது. ஆகையால் அவனுடைய உடலும் இங்கே விழுந்து விட்டது.''

ஆத்ம பரிபாகம் அடைந்து வருகின்றவர்கள் பிரபஞ்ச சம்பந்தமான எதைக் குறித்தும் செருக்குக் கொள்ளலாகாது. தற்பெருமை உடையவர்கள் தங்களைத் தாங்களே அழித்துக் கொள்கிருர்கள். இறைவனுடைய அருளால் யாவும் நிகழ்ந்து வருகின்றன என்னும் உண்மையை அறிகின்றவர்கள் தற்பெருமை கொள்ளமாட்டார்கள்.

தர்மர் தாம் மட்டும் மேலே போய்க்கொண்டிருக்கிருர். அவரைப் பின்தொடர்ந்து நாய் செல்கிறது. கைலாயகிரிக்குப் பக்கத்தில் போன பொழுது அவரைச் சொர்க்கத்திற்கு அழைத்துப் போக இந்திரன் விமானத்தைக் கொண்டு வந்து அங்கு நிறுத்தி இருந்தான். இந்திரன் தர்மரைப் பார்த்ததும் ''விமானத்தில் ஏறுங்கள்'' என்ருர். அதற்குத் தர்மர் பகர்ந்ததாவது: ''மனைவி திரௌபதியும் தம்பிமார்கள் நால்வரும் வழியில் இறந்து விட்டார்கள். அவர்கள் எங்கு என்ன நிலையில் இருக்கிருர்கள் என்பதை அறியாமல் நான் சொர்க்கத்துக்கு வரமாட்டேன்.'' இந்திரன் கேட்டதாவது: ''உங்களுக்கு அவர்கள்மீது இத்தகைய அபிமானம் இருக்கும் பொழுது அவர்கள் இறந்தது தெரிந்த பிறகும் அவர்களைத் திரும்பிப் பார்க்காமல் வந்தீர்களே? என்ன காரணம்?'' தர்மர் விடை பகர்ந்ததாவது: ''அவர்கள் இறந்து போனதை நான் திரும்பிப் பார்த்திருந்தால் நானும் வழியில் இறந்திருப்பேன். அவர்கள் இறந்ததற்குத் தக்க காரணங்கள் இருந்தன. அதனல் அவர்கள் மேலே வரவில்லை.'' தர்மர் அப்படிச் சொல்லியதில் பெரிய பாடம் நமக்கு இருக்கின்றது. பெரிய லட்சியத்தை நாடிச் செல்கின்றவர்கள் உலக இடைஞ்சல்களை முன்னிட்டு லட்சியத்தை நாடிப்போவதை நிறுத்தி விடுவார்களானல் அவர்கள் லட்சியத்தை அடையமாட்டார்கள். ஆகவே பெரிய லட்சியத்தை நாடிப் போகின்ற நாம் எத்தகைய இடைஞ்சலை முன்னிட்டும் நம்முடைய நாட்டத்தை நிறுத்தி விடக்கூடாது. தர்மர் மூலம் நமக்கு இந்தப் பாடம் கிடைக்கிறது.

ஒருவன் தற்கொலை செய்து கொள்வதற்காகக் கிணற்றில் விழப்போனன். ஆனல் அவன் கிணற்றில் விழாமல் திரும்பி வந்துவிட்டான். திரும்பி வந்ததற்குக் காரணம் கேட்ட பொழுது மழை வந்ததனல் திரும்பி வந்ததாகக் கூறினன். இத்தகைய நொண்டிச் சாக்குச் சொல்கிறவர்கள் இருக்கின்ருர்கள். இப்படி நொண்டிச் சாக்குச் சொல்கின்றவர்கள்

காரியத்துக்கு உதவமாட்டார்கள். அவர்கள் கோழைகளாக இருப்பார்கள். லட்சிய புருஷர்கள் உறுதிப்பாடே வடிவெடுத்தவர்களாக இருக்கவேண்டும். உயர்ந்த லட்சியத்தை எண்ணுவதற்கு ஏற்ப அதை அடைவதற்குச் செயல் திறம் உடையவர்களாகவும் இருக்க வேண்டும். அவர்களிடம் எடுத்த காரியத்தைச் செய்து முடிக்கும் உள்ளத்திட்பமும் ஊக்கமும் இருக்கவேண்டும்.

இந்திரன் தர்மரைப் பார்த்துப் பகர்ந்ததாவது: "உங்களுடன் வந்தவர்கள் அவர்களுடைய குற்றத்துக்காக விழுந்து இறந்துவிட்டார்கள். அவர்கள் ஸ்தூல சரீரங்களுடன் சொர்க்கத்திற்கு வருவதற்குத் தகுதியற்றவர்கள். தாங்கள் சொர்க்கத்திற்கு வருவதற்குத் தகுதியுடையவராக இருக்கிறீர்கள். நான் கொண்டு வந்திருக்கும் விமானத்தில் நீங்கள் ஏறிக்கொள்ளலாம்." தர்மர் விமானத்தில் ஏறப்போனார். அப்பொழுது அவருடன் வந்த நாயும் வாலைக் குழைத்துக்கொண்டு விமானத்தில் ஏறியது. நாய்க்குச் சொர்க்கத்தில் இடமில்லை என்று இந்திரன் கூறி நாய் விமானத்தில் ஏறுவதைத் தடுத்து நிறுத்தினான். "நான் சொர்க்கத்திற்கு வரமாட்டேன். என்னை நம்பி வந்த நாயை விட்டு விட்டு நான் வரமாட்டேன்." இந்திரன் பகர்ந்ததாவது: "தம்பிமார்களோடு நீங்கள் சொர்க்கத்தில் இருக்க விரும்புகின்றீர்களா? இந்த நாயோடு மண்ணுலகில் இருக்க விரும்புகிறீர்களா?" தர்மருக்கு இது பெரிய சோதனையாக இருந்தது. "நாய் அற்பப் பிராணியாக உங்களுக்குத் தோன்றலாம். என்னை நம்பி வந்த உயிர் நாயாக இருக்கலாம் அல்லது வேறு எந்த உயிராகவும் இருக்கலாம். அதைப் புறக்கணித்து விட்டு நான் சொர்க்கத்துக்கு வருவது இயலாது. எனக்குச் சொர்க்கம் வேண்டாம். இந்த நாயுடன் மண்ணுலகிலேயே நான் இருந்துவிடுகின்றேன்" என்றார் தர்மர். நம் தேசியப் பண்பாடு இதில் அடங்கி இருக்கிறது. நம் தேசியப் பண்பாடு தியாகமாகும். தர்மர் நாயின் பொருட்டுச் சொர்க்கத்தையே தியாகம் செய்யத் தயாராக இருந்தார். பக்தர்கள் பகவானுக்காக அனைத்தையும் தியாகம் செய்ய ஆயத்தமாக இருக்கின்றார்கள். 'இந்திரபதவி வந்தாலும் எனக்கு வேண்டாம். இறைவா, நீதான் எனக்கு வேண்டும்' என்று பக்தர் ஒருவர் இறைவனிடம் பிரார்த்திக்கின்றார். பிற உயிர்களின் நலத்திற்காகத் தெய்வத்தினிடத்தில் தம்மை ஒப்படைப்பது உயர்ந்த தியாகமாகும். இது வீரியத்தின் உச்சநிலையாகும்.

தர்மர் இங்ஙனம் சொல்லியதும் அவருடன் வந்த நாய் தர்மதேவதையாக மாறி அமைந்தது. தர்மதேவதை பகர்ந்ததாவது: "மகனே! நீ எல்லாச் சந்தர்ப்பங்களிலும் தர்மத்தை விட்டுப் பிசகாதிருக்கின்றாய். நாய் எஜமானனைப் பின்பற்றிச் செல்வது போன்று நான் உன்னைப் பின்பற்றி வந்து கொண்டிருக்கின்றேன். நீ ஒரு தடவையாவது தர்மத்தைவிட்டுப் பிசகியதில்லை. தர்மத்தின் சொரூபமாக இருக்கின்ற உன்னை இந்திரனோடு சேர்த்துச் சொர்க்கத்துக்கு அழைத்துப் போகிறேன்." ஆண்மையோடு கூடிய உறுதிப்பாட்டுக்குத் தான் வீரியம் என்று பெயர். தர்மத்தை விட்டுப் பிசகாத உறுதிப்பாடு, சத்தியத்தை விட்டுப் பிசகாத உறுதிப்பாடு வீரியம் எனப்படுகிறது.

அன்னை பராசக்தி வீரமாதா-வீர ஆராதனு என்று அழைக்கப்படுகின்றாள். அன்னை பராசக்தி வெவ்வேறு பாங்குகளிலிருந்து உயிர் வகைகளுக்கு உறுதிப் பாட்டை வழங்குகின்றாள். அவரவர்கள் செயலில் அவரவர்கள் உறுதிப்பாட்டோடு இருக்கவேண்டும். உறுதிப்பாடு பிசகாதிருப்பது வீரியம். வாழ்க்கையில் ஒருவன் நல்லவனாக இருப்பதோடு உறுதி படைத்தவனாகவும் இருக்கவேண்டும்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் உறுதி இல்லாதவர்களைப் பற்றிக் கூறுவதாவது: "சிலர் நல்லவர்களாக இருக்கின்றார்கள். ஆனால் அவர்கள் பலவீனர்களாக இருக்கின்றார்கள். உணவு வகையில் பொரி ஓர் உணவாகும். பசுவின் பால் சிறந்த உணவாகும். பசுவின் பாலில் பொரியை ஊறவைத்தால் அது வத வத சொத சொத என்று ஆய்விடும். மக்களில் சிலர் நல்லவர்களாக இருந்தாலும் பாலில் ஊற வைத்த பொரியைப் போன்று வத வத சொத சொத ஆட்களாக இருப்பார்கள். அவர்கள் வீரியம் படைத்தவர்களல்லர். அவர்கள்

காரியத்தை உறுதியுடன் செய்து முடிக்க மாட்டார்கள்.

நரேந்திரன் வீரியம் படைத்தவர். அவரைப் போன்று வீரியம் படைத்தவர்களே காரியத்துக்கு உதவுவார்கள். உழவர்கள் உழவுக்கு எருது வாங்கச் சந்தைக்குப் போவார்கள். எருதுகளை வாங்குவதற்கு முன்பு அவற்றின் வாலைத் தொட்டுப் பார்ப்பார்கள். வாலைத் தொடும்பொழுது சில எருதுகள் படுத்துக் கொள்ளும். இன்னும் சில எருதுகள் வாலைத் தொட்ட மாத்திரத்தில் துள்ளிக் குதிக்கும். அப்படித் துள்ளிக் குதிக்கும் எருதுகளைத்தான் உழவர்கள் வாங்குவார்கள். அவைகள்தாம் வீரியம் உள்ளவையாக இருக்கும். நரேந்திரன் துள்ளிக் குதிக்கும் எருது போன்று வீரியம் வாய்ந்தவராவார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் நரேந்திரனை ஒருமுறை பரீட்சை செய்தார். நரேந்திரனைப் பார்த்து அவர் கேட்டதாவது: "நீ உலகைத் துறந்து காவியுடை அணிந்து கொண்டு கல்கத்தா நகரின் தெருவில் போய்க்கொண்டிருக்கிறாய். அப்பொழுது உன்னைப் பார்த்துச் சிலர் பரதேசி என்று ஏளனம் செய்கின்றார்கள். அவர்களிடம் நீ எப்படி நடந்துகொள்வாய்?" நரேந்திரன் பதில் பகர்ந்ததாவது: "மதம் பிடித்த யானை ஒன்று தெருவில் கம்பீரமாகப் போய்க்கொண்டிருக்கிறது. அதன் பின் சில நாய்கள் குரைத்துக்கொண்டு செல்கின்றன. அந்நாய்களைப் பொருட்படுத்தாது யானை செல்லும். அந்த யானையைப் போன்று நான் அப்படிப் பேசுகின்றவர்களைக் குறித்துப் பொருட் படுத்தாது நாய்கள் கிடக்கின்றார்கள் என்று செல்வேன்." ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவருடைய வேகத்துக்குக் கொஞ்சம் தடைபோட்டார். "நீ அவ்வளவு தூரம் வரம்பு கடந்து போகவேண்டாம். உன்னைப் பரிகாசம் செய்கிறவர்களும் நாராயண சொரூபங்களாவார்கள். அவர்களையும் நீ நாராயண சொரூபங்களாகக் கருதவேண்டும்" என்றார் பரமஹம்சர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் சாந்த மூர்த்தியாக இருந்தும் வீரியத்தையே புகட்டி வந்தார்.

ஆத்மசாதகர்கள் வீரியம் படைத்தவர்களாக இருக்கவேண்டும் என்பது கோட்பாடு. இதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு நாம் ஒவ்வொரு செயலிலும் நம்முடைய திறமையைக் காட்டவேண்டும். தர்மத்தினின்றும் பிசகாது ஆண்மையுடனும் உறுதிப்பாட்டுடனும் இருக்க வேண்டும். சத்தியத்தினின்றும் பிசகாது சத்தியத்தைத் தீவிரமாகக் கடைப்பிடிக்க வேண்டும். மனதைப் பண்படுத்துவதற்காகத்தான் நாம் இவ்வுலகத்துக்கு வந்திருக்கின்றோம். இவ்வுலகம் நமக்கு ஒரு பயிற்சிக்கூடமாகும். மனது பண்படும்வரையிலும் நமக்குச் சோதனைகள் வந்துகொண்டே இருக்கும். அச்சோதனைகளைக் கண்டு நாம் சோர்வு அடையக்கூடாது. சோதனைகளை எல்லாம் மனம் ஏற்றுக்கொண்டு சமாளிக்கின்றவளவுதான் அது உறுதிப்பாடு உடையதாகிறது. நல்லகாரியம் செய்ய ஈடுபடும்பொழுதும் கஷ்டங்கள் பல ஏற்படும். அக்கஷ்டங்கள் மனதை உறுதிப்படுத்துவதற்காக ஏற்படுகின்றன என்பதை அறிந்துகொள்ள வேண்டும். மனது பண்பாடு அடைய அடைய கஷ்டங்களும் குறையும். மனம் முழுதும் பண்பாடு அடைந்துவிட்டால் வாழ்வு இன்பமயம் ஆகிவிடும். 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்ற கோட்பாட்டை அப்பொழுதுதான் நாம் விளங்கிக்கொள்ள முடியும். உலகுக்கு நலம் தரும் செயலைச் சுயநலமற்றுத் தீவிரமாகச் செய்து வருவோமானால் நம் மனதை நாம் பண்படுத்தியவர்களாகின்றோம். மனதிலுள்ள கேடுகளை அகற்றுவதுதான் மனதைப் பண்படுத்துவதாகும். தீய சம்ஸ்காரம் இருக்கும் வரையில் மனதில் கெட்ட எண்ணங்கள் தோன்றிக் கொண்டே இருக்கும். தீய சம்ஸ்காரத்தின் வேகத்தைக் குறைப்பதற்கு நல்ல சம்ஸ்காரங்களை வலுவுடையனவாக்கவேண்டும். ஜபம், பிரார்த்தனை, பஜனை மூலமாக நல்ல சம்ஸ்காரங்களை வலுப்படுத்தலாம். நம்மை இப்பாங்கில் பண்படுத்தினால் நாம் பண்பட்ட மக்களாக மாறிப் பாரமார்த்திகப் பெருநிலையை அடைவதற்குத் தகுதியுடையவர்களாகின்றோம். இதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு வீரமாதாவாகிய பராசக்தியைச் சார்ந்திருந்து பராக்கிரமம் படைத்தவர்களாக நல்வழியில் முன்னேற்றம் அடைந்து வருவோமாக. வீரமாதாவாகிய அன்னை பராசக்தி நம்மைப் பராக்கிரமம் படைத்தவர்களாக ஆக்கிப் பரிபாலித்து வருவாளாக.

(முற்றும்)

# கபீர் தாசர் சரிதம்

(136ஆம் பக்கத் தொடர்ச்சி)

முகம்மதியர்களுக்குக் கபீரிடத்தில் பயம் ஏற்பட்டுவிட்டது. கபீரைப் பெரிய மந்திர வாதி என நினைத்தார்கள். எனவே கபீரைக் கண்டால் பயந்து நடுங்கி ஒடுங்கிக் கிடந்தார்கள். கபீர் நிர்ப்பயமாக ராம மந்திரத்தை ஜபித்துக்கொண்டு ஆனந்தமாக இருந்தார். அவருடைய வீட்டைச் சுற்றிலுமுள்ள நிலத்தில் துளசிச் செடி பயிரிட்டுத் துளசி எடுத்து மாலை தொடுத்துப் பகவானுக்குச் சாத்தி மகிழ்ந்திருந்தார். அவர் சுவாசிக்கும் பொழுதெல்லாம் ராம மந்திரத்தின் ஓசையும் சுவாசத்தில் கலந்திருந்தது. ராம மந்திரத்தை மனனம் செய்த வண்ணம் ராமானந்த சுவாமிகளின் பணிவிடைக்கு ஆளாகும் வாய்ப்பு எப்பொழுது வந்து வாய்க்குமோ என்று ஏக்கமுற்றிருந்தார்.

அக்காலத்தில் கோரக்கர் என்ற பேர்பெற்ற சித்தர் ஒருவர் இருந்தார். அவர் அணிமா, மகிமா, கரிமா, லஹிமா, பிராப்தி, பிராகாம்யம், ஈசித்வம், வசித்வம் என்னும் அட்ட மகாசித்திகள் கைவரப்பெற்றிருந்தார். தம்மிடத்திலுள்ள சித்திகளைக் குறித்து அவர் அகம்பாவம் கொண்டிருந்தார். அவர் காசிக்கு வந்திருந்தபொழுது ராமானந்த சுவாமிகளின் பெருமைகளைப்பற்றிக் கேள்விப்பட்டார். அவர் இருந்த மடத்துக்குச் சென்றார். மடத்தின் வாயிலுக்கு எதிரில் சூலத்தை ஊன்றி அதன் நுனியில் வஸ்திரத்தை விரித்து அவ்வஸ்திரத்தின் மேல் அமர்ந்து ராமானந்தரைக் குறித்து அவதூறாகப் பேசினார். "கரும்பாலையில்லா ஊரில் இலுப்பைப் பூ சர்க்கரையாக இருப்பது போன்று அறிவில்லாத அந்தணர்கள் கூட்டத்தைச் சேர்த்துக்கொண்டு நீ ஓர் ஆச்சாரியன் என்று பெருமை அடித்துக்கொண்டிருக்கின்றாய். உன் தவ வலிமை எத்தகையது என்பதை இப்பொழுது நீ என்னிடத்தில் காட்ட வேண்டும். இல்லாவிடில் உன்னையும் இம் மடத்தையும் பஸ்மமாக்கப் போகிறேன். நீ அனேகருக்கு ஆச்சாரியனாக இருக்கின்றாய் என்று கேள்விப்பட்டேன். உன்னுடைய ஆச்சாரியத் தன்மையையும் உன் மந்திரத்தின் மகிமையையும் பிறருக்குக் காட்டும் படியாக என்னைப் போன்று சூலத்தின்மேல் அமர்ந்து கொண்டு ஜபம் செய்வதற்கு நீயாவது உன் சிஷ்யர்களில் யாராவது வெளியே வாருங்கள் பார்க்கலாம். அப்படி நீங்கள் வராவிடில் உங்களை யமலோகத்துக்கு அனுப்பப் போகிறேன்" என்று பலமுறை சப்தமிட்டு அட்டகாசம் செய்தார். ராமானந்த சுவாமிகளின் மாணாக்கர் ஒருவரும் வேலையாள் ஒருவனும் கோரக்கரை அடக்கக் கோபாவேசத்துடன் வெளியே வந்தார்கள். "எங்கள் சுவாமிகளைப் பெயரிட்டு அழைத்த உன்னை ஒழித்துக்கட்டப் போகிறோம்" என்று கூறிச் சிங்கத்தைப் போன்று கர்ஜித்தார்கள். "அடே! பயல்களே! நான் யார் என்பதை அறிந்துகொள்ளுங்கள். சாதுக்களோடு வாது செய்து தோற்றவர்களைச் சிறைச்சாலையில் அடைத்து வைக்கும் கோரப்பற்களையுடைய வியாக்ரம பராக்ரம கோரக்கச் சித்தன் என்பதை அறிந்து கொள்ளுங்கள். உங்களை யமலோகத்துக்கு அனுப்பப் போகின்றேன். ராமானந்தன் எங்கு ஒதுங்கிப் பதுங்கிக்கொண்டிருக்கின்றான்? என்முன் அவனை வரச்சொல்லுங்கள்" என்று பலத்த குரலுடன் கூறியபொழுது புலியைப் பார்த்துக் கிலியடைந்தோடும் பசுக் கூட்டத்தைப்போன்று அவர்களிருவரும் மடத்துக்குள் ஓடினார்கள். வேறு யாரும் வெளியில் வராமல் தடுத்து நிறுத்திவிட்டு ராமானந்த சுவாமிகளிடம் சென்று கோரக் என்னும் ராட்சதன் வந்துவிட்டான் என்பதைத் தெரிவித்தார்கள். கருடனைக் கண்ட சர்ப்பம் போன்றும், சிங்கத்தைக் கண்ட யானை போன்றும் அடங்கி ஒடுங்கி வந்த அவர்களுடைய பயத்தையும், கோரக்கனுடைய அரக்கத்தன்மையையும் அறிந்து யாது செய்வதென்று சிந்தித்துக் கொண்டிருந்தார் ராமானந்தர். சீடர்களும், மடத்திலுள்ள பணியாட்களும் மடத்தைவிட்டு ஓடிவிட்டார்கள். ராமானந்தர் மட்டும் தனிமையிலிருந்து மடத்துக்குள் தெய்வச் சிந்தனை செய்துகொண்டிருந்தார்.

கோரக்கருடைய அட்டகாசத்தையும் கோரக்கருக்குப் பயந்து ஸ்ரீமத் ராமானந்தரின்

மடத்திலுள்ளவர்கள் ஓடிப் போனதையும், சுவாமி ராமானந்தர் மட்டும் தனித்திருப்பதையும் அறிந்த கபீர் ராமானந்த சுவாமிகளை நாடி ஓடி வந்தார். ராமானந்தரிடம் சென்று "சுவாமி, எனக்கு அனுமதி தாருங்கள். அக் கோரக்கனை வென்று இம்மடத்தை விட்டு அவனைத் துரத்திவிடுகின்றேன்" என்றார். அதற்கு ராமானந்த சுவாமிகள், "அடே, நீ ஏன் இப்பொழுது வந்து என்னைத் தொந்தரவு செய்கின்றாய்? யானைக்கு முன் பூனை நிற்குமா? சிங்கத்தை யானை வெல்லுமா? புலியைப் புழு கொல்லுமா? கோரக்கனே கோபத்தோடு வந்திருக்கின்றான். அவனுக்கு நானே சமாதானம் சொல்ல வேண்டும். உபாயத்தால் ஆகின்ற காரியம் பராக்கிரமத்தால் ஆகாது. சமாதானம் அடைந்தவருக்குக் கோபம் இல்லை. ஆகையால் நீ உன் போக்கில் போ. நீ கோரக்கன் முன் செல்லவேண்டாம். அவனுடைய கோபத்துக்கு ஆளாக வேண்டாம். அவன் நினைத்தால் இந்த மடத்தைப் பஸ்மமாக்கிவிடுவான்" என்றார் கபீர். ஸ்ரீ ராமானந்த சுவாமிகளின் பாதங்களில் விழ்ந்து, "சுவாமி! சற்று நேரத்தில் அக்கோரக்கனுடைய அகந்தையை அழித்துத் தள்ளுகின்றேன். அவன் உங்கள் நாமத்தைக் கேட்டவுடன் அஞ்சும்படி செய்து விடுகின்றேன். கோரக்கனைத் துக்கத்தில் ஆழ்ந்து போகும்படி செய்கின்றேன்" என்று கூறி விட்டுக் கபீர் வெளியே கோரக்கன் இருக்குமிடத்துக்கு வேகமாகச் சென்றார். கோரக்கன் அருகில் நின்று, "கோரக்கா! உன்னுடைய வித்தைகளெல்லாம் என் சற்குருநாதராகிய ராமானந்த சுவாமிகளின் முன் செல்லா. நீ இங்குப் பொல்லாத வேளையில் வந்திருக்கின்றாய், நீ இங்கு நில்லாது சீக்கிரம் ஓடிப்போய் விட்டால் நல்லது. நீ கலகம் மூட்டவா இங்கு வந்தாய்?" என்றார் கபீர். "நீ யாரடா? என்னைப்பற்றி நீ அறியாயோ? என்னை எதிர்த்து எவன் இவ்வுலகில் உயிருடன் இருந்தான்?" என்றான் கோரக்கன். கபீர் கோரக்கனை நோக்கி "நான் ராமானந்த சுவாமிகளின் சீடனாவேன். உன் போன்ற மூடர்களை ஒழிக்கவும், எதிர்த்துப் பேசுவோரைப் பாழாக்கவும் நான் இங்கு வந்திருக்கின்றேன். தவ சிரேஷ்டராகிய ஸ்ரீ ராமானந்த சுவாமிகளுக்கு நீ எம்மாத்திரம்?" கபீருடைய வார்த்தைகள் கோரக்கனுடைய செவிகளில் புகுந்த மாத்திரத்தில் கோபத்தினால் உதட்டைக் கடித்து, பற்களை நெறித்துக் காசியையே எரித்து விடுபவன் போன்று அவன் ஆர்ப்பரித்தான். காசி மக்கள் நடுநடுங்கினர். ராமானந்த சுவாமிகளும் கபீர் மீது கோபித்துக்கோரக்கன்மீது சண்டைக்குப் போக வேண்டாமென்று தடுத்தார். கபீர் ராமானந்த சுவாமிகளின் திருவடிகளை வணங்கி கோரக்கன் இருந்த சூலத்தை அறைந்து கீழே விழ்த்தினார். தன் கையில் வைத்திருந்த பட்டு நூல்பந்தின் மேல் நுனியைப் பூமியில் வைத்துப் பந்தை மேலே வீசி எறிந்து அப்பந்தை ஆதாரமில்லாமல் மேலே நிற்கச் செய்து நூலின் வழியாக ஏறி அப்பந்தின் மேல் நின்று கொண்டு கோரக்கனை ஆங்குச் சண்டைக்கு அழைத்தார். "நீ என்னை வெல்ல முடியுமாயின் நான் இருக்குமிடத்துக்கு மேலே வா. என்னோடு வாதுக்கு வந்துபார். மரியாதையாக ஸ்ரீராமானந்த சுவாமிகளின் திருவடிகளை வணங்கி அவருடைய ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொள். சுவாமிகளைத் தவிர வேறு யாரும் உன்னைக் காப்பாற்ற முடியாது" என்றார் கபீர். கபீரின் செயலைப் பார்த்துக் கோரக்கன் சற்று வெட்கம் அடைந்தவனாக "உனக்குத் திறமை இருப்பின் கீழேவந்து என்னுடன் போரிடு" என்றான். கபீர் கீழே வந்து ராமானந்த சுவாமிகளை வணங்கி விட்டுக் கோரக்கன் முன் நின்றார். கோரக்கன் ராமானந்த சுவாமிகளின் வடிவம் எடுத்துக் கொண்டதால் ஆங்கு இரண்டு ராமானந்தசுவாமிகள் இருப்பதை மக்கள் கண்டனர். ராமானந்தர் வடிவத்தை எடுத்து நிற்கும் கோரக்கனைப் பார்த்து, "இப்பொழுது என்னைப் பார்" என்று கூறிவிட்டுக் கோரக்கனுடைய குருவாகிய மச்சேந்திரநாதர் வடிவத்தைக் கபீர் எடுத்தார். கோரக்கன் விஷ்ணு வடிவெடுத்துக் கபீரையும் அவருடைய குருவையும் சக்கரத்தால் துண்டித்து விடுவதாக அட்டகாசம் செய்தான். கபீர் உடனே ருத்திரரூபம் எடுத்துப் பாசுபதாஸ்திரத்தைக் கொண்டு "விஷ்ணு வடிவத்திலிருக்கும் கோரக்கனைத் துண்டம் துண்டமாக வெட்டி விடுவேன்" என்றார். கோரக்கன் சிங்க ரூபம் எடுத்துக் கர்ஜித்தான். கபீர்

யாளி ரூபம் எடுத்துச் சிங்கத்தின் பக்கத்தில் சென்றார். கோரக்கன் அக்கினி ஜுவாலையை நான்கு திக்குகளிலும் வீசினன். கபீர் மேக ரூபம் எடுத்து அதை அணைத்துவிட்டுக் கோடி சூரியனைப் போல் பிரகாசித்துத் தம் கிரணங்களால் கோரக்கனை வாட்டினார். கோரக்கன் அதைத் தாங்கமாட்டாது தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் சக்தி அற்றவனாகி ராமானந்த சுவாமிகளிடம் சென்று அடைக்கலம் புகுந்தான். கபீர் உடனே ஸ்ரீ ராமானந்த சுவாமிகளைப் பார்த்து "தாங்கள் ஆணையிட்டால் இக்கோரக்கனை எரித்து விடுகிறேன்" என்றார். காசி மக்கள் அனைவரும் ஆச்சரியம் அடைந்தவர்களாய்க் கபீரைப் போற்றவும், கோரக்கனைத் திட்டவும் ஆரம்பித்தார்கள். பிறகு ராமானந்த சுவாமிகள் கபீரையும் கோரக்கனையும் வாதம் செய்ய அனுமதித்தார். வாதத்தில் கபீர் வென்றார். கபீரை ஸ்ரீ ராமானந்த சுவாமிகள் ஆசீர்வதித்தார். வாதில் தோல்வியுற்ற கோரக்கன் மாயமாய் மறைந்து போனன்.

கபீருடைய பெற்றோர்கள் ஸ்ரீ ராமானந்த சுவாமிகளிடம் வந்து வணக்கம் செலுத்தினர்கள். ஸ்ரீ ராமானந்த சுவாமிகளிடம் ஆசிபெற்றுக் கபீரை வீட்டுக்கு அழைத்துச் சென்றார்கள். கபீர் பதினாறு வயதை அடைந்தார். பெற்றோர்கள் அவருக்கு மணம் செய்துவைக்க வேண்டுமென்று எண்ணினார்கள். பெற்றோர்கள் சுந்தரா என்னும் பெண்ணைக் கபீருக்கு மணம் முடிக்க விரும்பி அப்பெண்ணின் பெற்றோரிடம் தங்கள் கருத்தைத் தெரிவித்தார்கள். ஆனால் அப்பெண்ணின் பெற்றோர்கள் தங்கள் மத ஆச்சாரப்படி சுன்னத்துச் செய்துகொள்ளாதவனுக்குப் பெண் கொடுப்பதில்லை என்றார்கள். பெண்ணின் பெற்றோர்கள் தங்கள் மகளை வேறொருவனுக்கு மணம் பேசி முடிக்கத் தீர்மானித்தார்கள். ஆனால் பெற்றோர்களின் தீர்மானத்துக்குச் சுந்தரா இசையவில்லை. பெற்றோர்களிடம் அவள் பகர்ந்ததாவது: "நீங்கள் கபீருக்கு என்னை மணம் செய்து கொடுப்பதாக முன்பே வாக்குக் கொடுத்திருக்கிறீர்கள். இப்பொழுது அவ்வாக்கை மீறி மற்றொருவருக்கு மணம் செய்ய நீங்கள் கருதுவது குற்றமாகும். நானும் கபீரையே மணம் செய்துகொள்வதாகத் தீர்மானித்து விட்டேன். இனி வேறொருவரை மணம் செய்து கொள்வேனானால் நான் கற்பிலிருந்து பிசகிய குற்றத்துக்கு ஆளாவேன். முதலில் ஒருவனை மணம் செய்துகொள்ளத் தீர்மானித்த பின் வேறு ஆடவனைச் சிந்தையிலும் நினைக்கலாகாது. அப்படிச் சிந்திப்பேனானால் நான் விபசாரம் செய்தவளாவேன். இனி எனக்குக் கபீர்தான் கணவராவார். கபீரையன்றி வேறு யாரையும் நான் சிந்தையில் கொள்ளமாட்டேன். இது சத்தியம். கபீரைத் தவிர மற்ற ஆடவர்களெல்லாரும் எனக்குத் தந்தைகளும் சகோதரர்களும் ஆவார்கள். பதிவிரதைக்கு ஒருவன்தான் கணவனாவான். அந்த விரதத்திலிருந்து நான் பிசகமாட்டேன்." இங்ஙனம் சுந்தரா கூறித் தன் தீர்மானத்தில் உறுதியாக இருந்தாள். மகளின் உறுதியான தீர்மானத்தை அறிந்த பெற்றோர்கள் தம் மகளைக் கபீருக்கே மணம் முடிக்கத் தீர்மானித்தனர். விவாகம் விமரிசையாக நடந்தேறியது. மணமக்கள் மகிழ்ச்சியுடன் பகவத் சிந்தனையில் ஈடுபட்டிருந்தனர்.

ஒருநாள் கபீர் தம் குருநாதர் ஸ்ரீ ராமானந்த சுவாமிகளைப் பார்க்கப் புறப்பட்டார். கபீர் மனைவி சுந்தராவும் ஸ்ரீ ராமானந்த சுவாமிகளைத் தரிசிக்க வருவதாகக் கபீரிடம் தெரிவித்தாள். கபீர் பகர்ந்ததாவது: "உன்னுடைய பக்தியை மிகவும் பாராட்டுகின்றேன். என் குருநாதரை நீ பார்க்க விரும்புவது குறித்து நான் மகிழ்ச்சியடைகின்றேன். ஆனால் நீ ஒருபொழுதும் என் வாக்கை மீறாமல் நடந்து கொள்ளவேண்டும். என் வாக்குக்கு மறு வாக்கு உரைக்காமலிருக்க வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன். இதை நீ கடைப்பிடிக்க முடியுமா?" சுந்தரா பதிலளித்ததாவது: "பர்த்தாவை மீறிப் போகின்ற பதிவிரதைக்கு நற்கதி வாய்க்குமா? எனவே நான் உங்கள் வாக்கை ஒருநாளும் மீறமாட்டேன்." இதைக் கேட்டுக் கபீர் சந்தோஷம் அடைந்தார். "உன் விருப்பப்படியே என் சற்குருநாதரைத்தரிசித்து வணங்க என்னுடன் வா" என்று அழைத்துக் கொண்டு போனார். சுந்தராவும் ஸ்ரீ ராமானந்த சுவாமிகளின் பாதங்களில் வீழ்ந்து வணங்கிக் கண்ணீரால் அவருடைய பாதங்

களைக் கழுவிப் பக்தியுடன் எழுந்து நின்ருள். அப்பொழுது ஸ்ரீ ராமானந்த சுவாமிகள் கபிரைப்பார்த்து "இப்பெண்மணி யார்?" என்று கேட்கக் கபீர், "இவள் எனக்கு வாய்த்த வாழ்க்கைத் துணைவி" என்று கூறினர். ஸ்ரீ ராமானந்த சுவாமிகளும் மகிழ்ச்சியடைந்த வராய்ப் பகர்ந்ததாவது: "கபீர், உனக்கு நல்ல வாழ்க்கைத் துணைவி வந்து வாய்த்திருக்கின்ருள். நீங்கள் இருவரும் தூய வாழ்க்கை வாழ்ந்து வருவீர்களாக. உங்கள் இருவருடைய பக்தி மேன்மேலும் வளர்ந்து வருவதாகுக. நீங்கள் இருவரும் பாக்கியவான்கள். கருத்து ஒருமித்த தம்பதிகளாக இருக்கின்றீர்கள். இல்லறம் என்னும் நல்லறத்தில் பற்று வைக்காது வாழ்ந்து பரமனுக்குரிய தம்பதிகளாக வாழும் பேறு பெற்றிருக்கின்றீர்கள். நீங்கள் இருவரும் நாள்தோறும் மடத்துக்கு வந்து உங்கள் பக்தியை மேலும் வளர்த்துக் கொள்ளுங்கள். சத்சங்கத்தின் மூலம் உங்களுடைய மனதைக் கீழான விஷயங்களுக்குச் செல்லாமல் தடுத்து வையுங்கள். பக்தியிற் சிறந்த பக்த சிகா மணிகளாக வாழ்ந்து வருவீர்களாக" என்று ஸ்ரீ ராமானந்த சுவாமிகள் அவர்கள் இருவரையும் ஆசிர்வாதம் செய்து அனுப்பி வைத்தார்.

கபீர்முகம்மதியர்களுக்கிடையிலிருந்தஉயிர்க் கொலை செய்யும் மனப்பான்மையை மாற்றி அமைத்தார். உயிர்க்கொலை மிகவும் கொடியது என்பதை அவர்கள் மனதில் பதியும்படி செய்தார்.

இன்பமும் துன்பமும் வாழ்க்கையில் மாறி மாறி வரும். உலகாயதர்கள் அவற்ருல் மிகவும் பாதிக்கப்படுகின்ருர்கள். ஈசவிடம் மனதை ஆழ்ந்து ஈடுபடுத்துவதற்கு வாழ்க்கையில் வரும் சோதனைகளைப் பக்தர்கள் பயன் படுத்திக்கொள்கிருர்கள். கபீருடைய இல்லற வாழ்க்கையில் பொருள் வறுமை ஏற்பட்டது. நெய்த வஸ்திரம் விலைபோகாமல் குடும்பத்தில் அன்ருட உணவுக்கே திண்டாட்டம் ஏற்பட்டது. ஒருநாள் கணவனும் மனைவியும் காலையிலிருந்து மாலைவரையில் பட்டினியாக இருந்தார்கள். அவ்வமயம் நூறு சாதுக்கள் கபீர் வீட்டுக்கு விருந்தினராக வந்தார்கள். கபீர் அவர்கள் வரவைத் தம் மனைவியிடம் எடுத்துக் கூறினர். மனைவி தன்னிடமிருந்த நகை ஒன்றைக் கபீரிடம் தந்து அதை விற்றுக் கிடைக்கும் தொகையைக்கொண்டு விருந்தினரை உபசரிக்கலாம் என்ருள். கபீரும் மகிழ்ச்சி அடைந்தவராய் அந்நகையை வாங்கிக் கொண்டு கடைத்தெருவுக்குச் சென்ருர். ஆனல் அதன் மூலம் கிடைத்த தொகை போதவில்லை. அந்நகரிலிருந்த வணிகனிடம் சென்று தனக்கு வேண்டிய தொகையைக் கொடுத்து உதவினல் அவ் வாணிகனுக்கு ஒரு மாத காலம் ஊழியம் செய்து அத்தொகையைக் கட்டிவிடுவதாகக் கூறினர் கபீர். அவ்வணிகனும் கபீருக்கு வேண்டிய தொகையைக் கொடுத்து உதவினன். வீட்டுக்கு விருந்தினராக வந்த சாதுக்களை மிகச் சிறப்பாகக் கபீரும் அவர் மனைவியும் உணவு படைத்து உபசரித்து அனுப்பினர்கள். சாதுக்களும் அவர்கள் இருவரையும் ஆசீர்வதித்துச் சென்ருர்கள்.

கபீருக்குக் கடன் கொடுத்த வணிகன் ஒரு ராம பக்தனுவான். அவ்வணிகனுடைய கனவில் ராமபிரான் தோன்றி "அன்பா! நீ இவ்வாண்டு என் ஆலயத்தில் கொண்டு வந்து போடும் உண்டியல் தொகையைப் போட வேண்டாம். கபீர் வடிவத்தில் வந்து நான் அவ் உண்டியல் தொகையை உன்னிடமிருந்து பெற்றுக் கொண்டேன். இவ்வாண்டு நீ கொடுத்த தொகை அரிய காரியத்துக்குப் பயன்பட்டுவிட்டது. எனவே நீ கபீரிடம் எந்த வேலையும் வாங்கவேண்டாம்" என்று அருளினர். உடனே அவ்வணிகன் கபீருடைய வீட்டுக்குச் சென்று "உங்கள் பெருமையை நான் இன்றுதான் அறிந்தேன். என் இஷ்ட தெய்வமான ராமபிரானைக் கனவில் கண்டு தரிசிப்பதற்கு நீங்கள் அருள்புரிந்தீர்கள். நான் ராமபிரானுக்குச் செலுத்த வேண்டிய காணிக்கையைத்தான் உங்களிடம் கொடுத்திருக்கிறேன். நீங்கள் எனக்கு ஊழியம் செய்யவேண்டாம். நான் உங்களுக்கு அடிமை. நான் தொண்டருக்குத் தொண்டராக இருக்கும் பேறு பெற்று விட்டேன்" என்று கூறி ராமபிரான் தன் கனவில் கூறியதைத் தெளிவு படுத்தினன். கபீரும் அவர் மனைவியும் அதைக் கேட்டுப் பகவானுடைய செயலை எண்ணி எண்ணிப் பரமானந்தத்தில் திளைத்திருந்தார்கள். (தொடரும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-177

**975. பூர்வஜா பூர்வஜா** — எல்லாவற்றுக்கும் முன்பு தோன்றியவள் என்பது இந்நாமத்தின் பொருள்.

தோன்றிய யாவும் மூலப் பிரகிருதியில் ஒடுங்குகின்றன. தோற்றத்துக்கு வரும்பொழுது மூலப்பிரகிருதியினின்றுதான் யாவும் தோன்றி வருகின்றன. எனவே மூலப்பிரகிருதி எல்லாவற்றுக்கும் முன்பு தோன்றியது ஆகிறது. மூலப்பிரகிருதி அசைவற்றிருக்கும்பொழுது யாவும் அதனிடத்து ஒடுங்கிக் கிடக்கின்றன. மூலப்பிரகிருதியினிடத்து அசைவு உண்டாகும்பொழுது யாவும் தோற்றத்துக்கு வருகின்றன. பிரகிருதி முக்குண மயமானது. மூலப்பிரகிருதி வடிவெடுக்கும் பொழுது முக்குணத்தின் தாரதம்மியமாக இத்தனை உயிர் வகைகள் தோன்றிவருகின்றன. குணபேதத்துக்கு ஏற்ப உயிர்களிடத்து வேற்றுமையைக் காண்கின்றோம்.

தமோகுணம் மிகுந்திருப்பது ஜடப்பொருளாகிறது. ரஜோகுணம் முன்னணிக்கு வரும்பொழுது ஸ்தாவர ஜங்கமங்கள் தோன்றுகின்றன. சத்துவகுணம் ஓங்கும்பொழுது சேதனத் தன்மை ஓங்குகிறது. முற்றிலும் சத்துவ குணம் ஓங்கியிருக்கின்ற உயிர் சேதனமயமாக இருக்கிறது. புல் முதல் பிரம்ம ஞானிவரையில் உள்ள யாவும் மூலப்பிரகிருதியினிடத்திருந்து தோன்றி வந்தவைகளேயாம்.

தாய் ஒருத்தி குழந்தையைத் தோற்றுவிக்கின்றாள். குழந்தையைத் தோற்றுவிக்கும் தாய் அக்குழந்தையைப் பராமரித்து வளர்த்து வருகின்றாள். அக்குழந்தை வளர்ந்து சான்றோன் ஆகும்பொழுது தாய் பெருமகிழ்ச்சி அடைகின்றாள். ஈன்றபொழுதில் அடையும் இன்பத்தை விடச் சான்றோனைக் காணுகின்ற நிலையில் தாய் அடைகின்ற இன்பம் அதிகமானது.

**'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்'**

என்பது பொய்யாமொழி. தாய் ஒருத்தி குழந்தையை ஈன்றெடுத்துச் சான்றோன் ஆக்குவது போன்று அண்டத்திலுள்ள உயிர்கள் அனைத்தையும் தோற்றுவித்து அவைகள் அனைத்தையும் சேதனமயமாக்கிச் சிவனிடத்து ஒப்புவிக்கின்ற செயலை மூலப்பிரகிருதியாகிய அன்னை பராசக்தி செய்துவருகின்றாள்.

பிரபஞ்சம் தோற்றத்தில் இருக்கிறபொழுது சிருஷ்டி என்கின்றோம். பிரபஞ்சம் தோன்றா நிலையில் இருக்கின்றபொழுது பிரளயம் என்கின்றோம். தோற்றத்தில் உள்ள பிரபஞ்சத்துக்கும் தோன்றாநிலையிலுள்ள பிரபஞ்சத்துக்கும் மூலப்பிரகிருதி காரணமாக இருக்கின்றது. பிரபஞ்சம் ஒடுங்கும்பொழுது யாவும் மூலப்பிரகிருதியினிடத்தில் ஒடுங்கிவிடுவதால் மூலப்பிரகிருதி யாவுக்கும் அடிப்படையாக இருக்கிறது. சலனமற்ற நிலையில் அப்பொழுது மூலப்பிரகிருதி இருக்கிறது. மூலப்பிரகிருதியினிடத்தில் சலனம் உண்டாகிறபொழுது சிருஷ்டி துவங்குகிறது. மூலப்பிரகிருதியிடத்திலிருந்து யாவும் தோற்றத்துக்கு வருகின்றன. எனவே, தோற்றத்திலுள்ள பிரபஞ்சத்துக்கும் மூலப்பிரகிருதி ஆதிகாரணமாக இருக்கிறது. தோன்றி மறையும் பிரபஞ்சத்துக்கு அடிப்படையாக இருக்கும் சக்தியை மூலப்பிரகிருதி என்கின்றோம். உயிர்களைத் தோற்றுவித்து உயிர்களைச் சிவனிடத்துச் சேர்க்கும் செயலை மூலப்பிரகிருதித்தாய் ஓயாது செய்து வருகின்றாள். பரம்பொருளிடத்திலிருந்து மூலப்பிரகிருதி தோன்றி வந்து உயிர்கள் அனைத்தையும் பண்படுத்தி வருவதால் எல்லாவற்றிற்கும் முன்பு தோன்றிய ஆதிசக்தி என்று அதனை நாம் போற்றுகின்றோம். அன்னை பராசக்தி ஆதிசக்தியாயிருக்கும் இத்தத்துவத்தை நாம் நன்கு உணர்கின்ற அளவு அது சிறந்த அம்பிகை வழிபாடாகின்றது.

**976. த்ரிபுராம்பிகா த்ரிபுராம்பிகா** – மூன்று சரீரங்களுக்கும் மூன்று அவஸ்தைகளுக்கும் அதிதேவதையாக இருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

ஸ்தூல, சூட்சும, காரண சரீரங்களாகத் தோன்றியிருப்பவளும் அம்பிகையாகின்றாள்.

ஸ்தூல உடல் நம் கண்ணுக்குப் புலனாகின்றது. ஸ்தூல உடலில் உள்ள கவர்ச்சிமயமாக அம்பிகை இலங்குகின்றாள். ஒவ்வொரு பொருளின் புற வடிவமும் அம்பிகையை நமக்கு ஞாபக மூட்டுகின்றபொழுது புறவடிவத்தில் இருக்-

கும் அம்பிகையை நாம் போற்றியவர்களாகின்றோம். பொருளின் புறத்தோற்றத்தைக் கண்டு காமம் என்னும் கிழ் உணர்ச்சிக்கு இடம் கொடுப்பவர்கள் அம்பிகை உபாசனை செய்தவர்களாகமாட்டார்கள். பொருளின் புறவடிவம் அம்பிகையை ஞாபகமூட்டும்பொழுது அப்புற வடிவத்தின் மூலம் அம்பிகை நன்கு ஆராதிக்கப்படுபவளாகின்றாள். ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒருதடவை விலைமாது ஒருத்தியைக் கண்டபொழுது அவள் முன் விழ்ந்து வணங்கினார். விலைமாதின் புறவடிவத்தில் அவர் கண்டது அம்பிகையின் காட்சியாகும். ஒரு சமயம் ஸ்ரீ சாரதா தேவியார் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு விசிறி வீசிக்கொண்டிருந்தபொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் கேள்வி ஒன்று கேட்டார். "நீங்கள் என்னை எவ்வாறு காண்கின்றீர்கள்?" என்பது அக்கேள்வியாகும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அளித்த விடையாவது: "அகிலாண்ட நாயகி ஆலயத்தின்கண் விக்கிரக வடிவத்திலிருந்து எனக்குக் காட்சி தருகின்றாள். அகிலாண்ட நாயகி சந்திரமணி என்னும் பெயர் தாங்கி இவ்வுடலை ஈன்றெடுத்த தாயாக எனக்குக் காட்சி தருகின்றாள். அகிலாண்ட நாயகி சாரதாமணியாகிய உன் வடிவத்தில் வந்து பணிவிடை செய்வதை நான் காண்கின்றேன்." இங்ஙனம் புறவடிவங்களில் ஸ்ரீ அம்பிகையைக் கண்டது ஸ்ரீ ராமகிருஷ்ணர் செய்த அம்பிகை வழிபாடாகும்.

சூட்சம சரிரமாக எண்ணம் அல்லது மனம் அமைந்திருக்கிறது. மனம் சத்தியத்தை எண்ணும்பொழுது சூட்சம வடிவத்திலிருக்கும் அம்பிகையை அது உபாசனை செய்கிறது. மனத்தைத் தூய்மைப்படுத்தினால் சூட்சம மயமாக இருக்கின்ற அம்பிகையை நாம் உணரலாம். சத்தியத்தை எண்ணுந்தோறும் எண்ணத்துக்கு வலிவு உண்டாகிறது. எண்ணத்தைத் தூய்மைப்படுத்தினால் சூட்சம மயமாக இருக்கும் அம்பிகையை நாம் வழிபட்டவர்களாகின்றோம்.

காரண சரிரத்தை அஞ்ஞானம் என்கின்றோம். ஆத்மசொரூபத்தை மறைத்துவைக்கும் சக்திக்கு அஞ்ஞானம் என்று பெயர். ஆத்ம சொரூபத்தை ஆழ்ந்து தியானம் பண்ணினால் அஞ்ஞானமயமாக இருக்கின்ற சக்தி விலகி நம் சொரூபம் நமக்கு விளங்குகிறது. அம்பிகையின் அருளால் நமக்கு ஞானம் வாய்க்கின்றது. இங்ஙனம் ஸ்தூல, சூட்சும, காரண சரிரங்களாக இருக்கும் அம்பிகையை வழுத்த நாம் கற்றுக்கொள்ளவேண்டும்.

ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி என்னும் மூன்று அவஸ்தைகள் இருக்கின்றன. அவற்றை விழிப்பு, கனவு, உறக்கம் என்று கூறலாம். விழிப்பு நிலையில் பிரபஞ்சத்தைக் காண்கின்றோம். இப்பிரபஞ்சமயமாக இருக்கும் அம்பிகையை நாம் உணர்கின்றபொழுது விழிப்பு நிலையில் நாம் அம்பிகையை உபாசனைபண்ணுகின்றோம். மனதின் பாங்கிற்கேற்பப் பிரபஞ்சக் காட்சி அமைகின்றது. மனதில் தெய்வத்தன்மை தோற்றத்துக்கு வரும்பொழுது பிரபஞ்சத்தில் மறைந்து கிடக்கும் தெய்வமும் தோற்றத்துக்கு வருகிறது. விழிப்பு நிலையில் அடைந்திருக்கின்ற ஆன்மீக விழிப்பை ஸ்ரீ ராமகிருஷ்ணர் நரேந்திரனுக்கு விளக்குகின்றார். நரேந்திரன் கடவுளைக் காட்டமுடியுமா? என்ற கேள்வியுடன் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் வந்தார். அருள்தாகத்தோடு வந்த நரேந்திரனிடம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்ததாவது: "குழந்தாய்! என்னுடைய ஊனக்கண்களினால் உன்னை நான் எவ்வளவு தெளிவாகக் காண்கின்றேனோ அதைவிட இன்னும் பன்மடங்கு தெளிந்த நிலையில் தூய அகக்கண்ணால் தெய்வத்தைக் காண்கின்றேன். உன்னிடத்தில் தூய நிலையைக் காண்கின்றேன். ஆகையால் உன்னிடமும் நான் அந்தத் தெய்வக்காட்சியை உண்டுபண்ண முடியும்."

ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய மனது அதீத நிலைக்குப் போனபொழுது அவர் தம் வலக்கரத்தை நரேந்திரனின் நெஞ்சின்மீது வைத்தார். நரேந்திரனுக்கு இப்பிரபஞ்சக் காட்சி மறைந்தது. தெய்வக் காட்சியை அவர் கண்டார். மனம் தூயதாகும் பொழுது ஆன்மீக விழிப்பு உண்டாகிறது. ஆன்மீக விழிப்பை அடையும் பொழுது நாம் இப்பொழுது விழிப்பு நிலையில் காணும் பிரபஞ்சம் தெய்வ மயமாகத் தென்படுகிறது. நம்மிடத்து ஆன்மீக விழிப்பு உண்டாவதற்கு இப்பிரபஞ்சத்தைப் பயன்படுத்துவோமானால் விழிப்பு நிலையில் அம்பிகையை நாம் நன்கு வழிபட்டவர்களாகின்றோம்.

நம் மனதில் புதைந்து கிடக்கின்ற எண்ணங்கள் சொப்பனத்தில் வருகின்றன. விழிப்பு நிலையில் நாம் பெறுகின்ற அனுபவங்களெல்லாம் சொப்பனத்தில் காட்சிகளாகத் தென்படுகின்றன. மனம் விழிப்பு நிலையில் தெய்வீக இணக்கம் வைத்திருக்கின்ற பொழுது தெய்வீகச் சம்ஸ்காரங்கள் மனதில் பதிகின்றன. அப்பொழுது கனவிலும் தெய்விகக் காட்சியைப் பார்ப்பது சாத்தியமாகிறது. மனதில் தெய்விகப் பதிவுகளை உண்டாக்குவதே சொப்பனத்தில் அம்பிகையை வழிபடுவதாகிறது.

ஆழ்ந்த உறக்கம் நமக்கு உண்டாகின்ற மூன்ருவது அவஸ்தையாகும். அவ் அவஸ்தையில் நாம் காரிருளில் மூழ்கிக் கிடக்கின்ேறாம். உறக்கத்தில் நாம் ஜடமயமாகின்ேறாம். சாதனையின் மூலம் மனம் தெளிவடைந்து வருங்கால் உறக்கத்தில் நமக்கு ஏற்படும் அனுபவம் தெளிவாகின்றது. உறக்கத்தில் நாம் ஆனந்தமாக இருந்தோம் என்பதை விழித்த பிறகுதான் உணர்கின்ேறாம். உறக்கத்தில் உண்டாகும் அனுபவத்தைத் தெளிவாக உணர்கின்ற பொழுது அது சமாதி எனப்படும். ரங்காநாதர் யோக நித்திரை அல்லது அறிதுயில் கொள்கிருரென்று கூறுகிேறாம். அவ் அறிதுயில் தான் தெளிந்த நிலையாகும். நரேந்திரன் உறங்கப் போகும்பொழுது ஜோதி மயமான அருள் வடிவம் ஒன்று அவரை நோக்கி வருவதை உணர்வார். அவ் அருள் வட்டத்தில் திளைத்திருந்ததே அவருடைய உறக்கமாகும். “இத்தகைய அருள் வட்டத்தில் நீ திளைத்திருக்கின்ற அனுபவம் உனக்கு உண்டாகிறதா?” என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் நரேந்திரனைக் கேட்டார். “உறங்கப் போகின்ற யாவருக்கும் அந்த அனுபவம் உண்டு அன்ேறா?” என்ருர் நரேந்திரன். ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்ததாவது: “நீ தூய உள்ளம் படைத்திருப்பதால் உறங்கப் போகும்போது அத்தகைய அனுபவத்தைப் பெறுகின்ருய். மற்றவர்கள் உறங்குகின்ற பொழுது காரிருளில் மூழ்கிக் கிடக்கின்றனர்.” மனதைத் தூய்மைப்படுத்தியவர்கள் ஆழ்ந்த உறக்கத்திலும் அம்பிகை உபாசகர்களாக இருக்கின்ருர்கள். மூன்று சரீரங்கள் மயமாகவும் மூன்று அவஸ்தைகள் மயமாகவும் அம்பிகை விளங்கி வருகிருள் என்பதை நாம் அறிந்து வருகின்ற பொழுது அது ஒப்பற்ற அம்பிகை வழிபாடாகும்.

---

## பழக்கதோஷம்

கருவுற்றிருந்த பெண்சிங்கமொன்று ஆட்டு மந்தை ஒன்றைத் தாக்கியது. ஆட்டு மந்தையைத் தாக்கிய வேகத்தில் அதன் வயிற்றிலிருந்த குருளை வெளிவந்தது. தாய்ச் சிங்கம் அங்கேயே இறந்துபோய்விட்டது. குருளைச் சிங்கம் ஆட்டோடு சேர்ந்து வளர்ந்து வந்தது. அது ஆடுகளோடு பழகிவந்ததால் ஆடுகளைப் போலப் புல்லை மேயவும், ‘மே மே’ என்று கத்தவும் பழகிக்கொண்டது. தன் சொந்த இயல்பான சிங்கத்தின் வீரத்தை மறந்துவிட்டது.

சில மாதங்களுக்குப் பிறகு அவ்வாட்டு மந்தையைத் தாக்குவ்தற்காக ஆண் சிங்கம் ஒன்று வந்தது.அவ்வாட்டு மந்தையில் அதைப்போன்ற சிங்கம் ஒன்று இருந்ததை அது பார்த்தது. புதிய சிங்கம் பழைய சிங்கத்தை ஆட்டு மந்தையிலிருந்து பிரித்து ஒரு நீர்நிலைக்குத் துரத்திச் சென்றது. அந்நீர்நிலையில் தன் உருவத்தைக் காட்டித் தானும் அதுவும் ஒன்று என அறிவுறுத்தியது. ஆனல் ஆட்டுமந்தையோடு இருந்து வந்த சிங்கம் ஆடுபோன்று கத்தியது. பெரிய சிங்கம் மாமிசத்துண்டு ஒன்றை எடுத்து ஆட்டு மந்தையில் வாழ்ந்து வந்த சிங்கத்தின் வாயில் வைத்துத் திணித்தது. பெரிய சிங்கம் கர்ஜித்தது. சிங்கத்தின் கர்ஜனையைக் கேட்டவுடன் அதனிடத்து மறைந்திருந்த சிங்கத்தின் தன்மை வெளிப்பட்டது. தன்னைச் சிங்கம் என அது உணர்ந்துகொண்டதால் வீரியத்துடன் நடந்துகொண்டது. ஆட்டு மந்தையோடு சேர்ந்ததன் விளைவாகச் சிங்கத்தின் இயல்பு பின்னணிக்குப் போயிருந்தது. சிங்கத்தோடு சேர்ந்தபொழுது அதனுடைய உண்மையான உணர்வு வெளிப்பட்டது. அங்ஙனம் பிரகிருதியோடு இணைந்துள்ள நம்மிடம் ஆன்மிக உணர்வு பின்னணியில் இருக்கிறது. ஆன்மிக இணக்கம் ஏற்படும்பொழுது நம்முடைய உண்மையான சொரூபம் நமக்கு விளங்குகின்றது.

---

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (352) சிவலிங்கத்தின் தத்துவம் என்ன?**

இறைவன் உருவமாகவும் இருக்கின்றார்.அரு உருவமாகவும் இருக்கின்றார். அருவமாகவும் இருக்கின்றார். சிதம்பரத்திலுள்ள நடராஜர் உருவக் கடவுளுக்கு விளக்கமாகிறார். சிதம்பர இரகசியம் அருவக் கடவுளுக்கு விளக்கமாகிறது. சிவலிங்கம் அரு உருவக் கடவுளுக்கு விளக்கமாகிறது.

மேலும் சிவலிங்கச் சின்னத்தில் பரந்த தத்துவங்கள் புதைந்து கிடக்கின்றன. உருவமற்ற பொருள் உருவம் எடுக்கவும் வல்லது என்பதைச் சிவலிங்கம் விளக்குகிறது. சிவலிங்கத்தின் அமைப்பைக் காண்போம். ஆவுடையார் என்னும் கீழ்ப்பகுதி சக்தியின் சின்னம். அதில் நாட்டப் பெற்றிருக்கும் லிங்கம் சிவத்தின் சின்னம். சிவசக்தியின் ஐக்கியத்தால் சராசரங்கள் அனைத்தும் தோன்றியுள்ளன என்னும் கருத்து அதில் புதைந்து கிடக்கிறது.

உயிர்த்தத்துவம் சிவம். உடல் தத்துவம் சக்தி. உடல் இல்லாது உயிர் தன்னை விதவிதமாக விளக்கிக்கொள்ள முடியாது. உயிர் இல்லாது போய்விட்டால் உடல் சவமாகிவிடும். உயிரும் மெய்யும் சேர்வதால் இயற்கைத் திட்டம் இனிது நிறைவேறுகிறது. சிவ தத்துவத்துக்கும், சக்தி தத்துவத்துக்கும் புறம்பாக இயற்கையில் ஒன்றுமில்லை. இயற்கையின் நடைமுறையைச் சிவலிங்க தத்துவம் விளக்கிக் கொண்டிருக்கிறது. உயிர்கள் ஆண் பெண் சேர்க்கையால் தோன்றுகின்றன என்பது உண்மை. உடல் சொரூபமே கீழ்மையின் தோற்றம் என்பதை நாம் மறந்துவிடலாகாது. ஒரு மனிதன் ஆண் பெண் சேர்க்கையின் விளைவு என்று நாம் கருதுவதில்லை. அவன் எத்தகைய மனபரிபாகம் உடையவன் என்பதையே நாம் கருத்தில் எடுத்துக் கொண்டு மதிப்புத் தருகிறோம்.

தெய்வம் எல்லாம் வல்லது, எங்கும் நிறைந்தது. உயிர்க்குயிராய் இருப்பது என்றும் அண்டம் பிண்டம் யாவும் அதனிடத்திருந்தே தோன்றியுள்ளன என்றும் சிவலிங்கத்தை வழிபடுபவர்கள் கருதுகின்றார்கள். எனவே சிவலிங்கத்தில் பொதிந்திருக்கும் கருத்துக்களையே நாம் யாண்டும் நினைவில்கொள்ள வேண்டும்.

**கேள்வி: (353) பக்திப் பாடல்களைக் கேட்டுக்கொண்டிருக்கும்போதோ, பக்தியை விளக்கும் திரைப்படக் காட்சியைப் பார்க்கும்போதோ மனம் உணர்ச்சி வசப்படுகிறது. அப்பொழுது கண்களினின்றும் கண்ணீர் வருகிறது. இது ஆத்மசாதனையின் முன்னேற்றத்தின் அறிகுறியா?**

மனம் அறிவு சொரூபமாகவும், உணர்வு சொரூபமாகவும் இருக்கிறது. ஆராய்ச்சித் துறையில் மனது ஈடுபடும்பொழுது அம்மனது அறிவு சொரூபத்தில் நாட்டம் உடையதாக இருக்கிறது. தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபட்டு உண்மையை அறிவதில் இன்பம் காண்கின்ற மனது அறிவு சொரூபத்தில் செல்லும் இயல்புடையது என்பதை விளக்கிக் காட்டுகிறது. இறைவனுடைய மகிமைகளைக் கேட்கும் பொழுதும் பக்தி சம்பந்தமான நிகழ்ச்சிகளைக் காணும் பொழுதும் மனது உணர்ச்சி வசப்படுமானால் அம்மனது உணர்வு மயமானது என்பதை வெளிப்படுத்துகிறது. இன்னும் சிலருடைய மனது காரியங்களைத் திறம்படச் செய்வதில் மகிழ்ச்சி அடைகின்றது. அம்மனது ஆற்றல் சொரூபத்தில் நாட்டம் உடையதாக இருக்கிறது. மனத்தின் பாங்கை அறிந்து அதற்கேற்ற சாதனை முறையை நாம் மேற்கொள்ள வேண்டும்.

தத்துவ ஆராய்ச்சியில் இன்பம் காண்கின்ற மனதுக்கு ஞானயோக மார்க்கமும், பகவத் விஷயங்களில் உணர்ச்சி வசப்படுகின்ற மனதுக்குப் பக்தியோக மார்க்கமும் திறம்படச் செயல்புரிவதில் மகிழ்ச்சி அடையும் மனதுக்குக் கர்மயோக மார்க்கமும் சாதனைக்குரிய மார்க்கங்களாகின்றன. எனவே மனம் பகவத் விஷயங்களில் ஈடுபடும்பொழுது உணர்ச்சி வசப்பட்டுக் கண்களில் நீர் வடியுமானால் அம்மனதுக்குப் பக்தியோக மார்க்கமே சிறந்ததாகும். அத்தகைய மனம் படைத்தவர்கள் பக்தியோக மார்க்கத்தை மேற்கொள்ள

லாம். பக்தியோகத்தை முதன்மையாக வைத்துக்கொண்டு ஞானயோக மார்க்கத்தையும், கர்மயோக மார்க்கத்தையும் அதற்கு உதவி மார்க்கங்களாக வைத்துக் கொள்ளலாம்.

ஞானயோகம், பக்தியோகம், கர்மயோகம் ஆகிய மார்க்கங்களுள் எந்த மார்க்கத்தைப் பின்பற்றினாலும் சாதனையில் முன்னேற்றம் அடையலாம். சாதனையில் நாம் முன்னேறி வருகிறோமா என்பதை அறிந்துகொள்வதற்குச் சில சோதனைகள் இருக்கின்றன.

மனம் உலகில் வரும் இன்ப துன்பங்களுக்கு வசப்படாது நடுநிலையில் எந்த அளவுக்கு நிற்கிறதோ அந்தஅளவுக்குஅது ஆத்மசாதனையின் முன்னேற்றமாகும். மனம் காமத்துக்கு வசப்படாது காமஉணர்ச்சியை வென்று பழகும்பொழுது அது ஆத்ம சாதனையின் முன்னேற்றமாகும். மனது துயரத்துக்கு ஆளாகாது மகிழ்ச்சியுடையதாயிருக்கும் பொழுது சாதனையில் முன்னேறி வருகிறோம் என்பதற்கு அது அறிகுறியாகும். மனத்தில்உறுதிப்பாடும்,அச்சமின்மையும், ஆசையின்மையும், அகங்காரமின்மையும், தடுமாற்றமின்மையும் நிலவி வருமானால் அவை சாதனையின் முன்னேற்றத்திற்கு அறிகுறிகளாகும். மனம் தெளிவடைந்து தனிமையில் இன்பம் காணும் நிலையை அடைகிற பொழுது சாதனையில் முன்னேறி வருகிறோம் என்பதை அறிந்து கொள்ளலாம். மனது மாண்புடையதாக மாறி அமையும் பொழுதுதான் நாம் சாதனையில் முன்னேறியவர்களாகின்றோம். நாம் சாதனை செய்வது சித்திகளைப் பெறுவதற்காக அன்று. நாம் சாதனை செய்வது பேரும் புகழும் பெறுவதற்காக அன்று. நாம் சாதனை செய்வது மனதைப் பண்படுத்துவதற்கேயாம். இதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டால் நாம் சாதனையில் முன்னேறி வருகிறோமா? இல்லையா? என்பதை நாமே அறிந்துகொள்ளலாம்.

**கேள்வி: (354)** தற்கொலை அல்லது கொலை நிகழ்ந்த வீட்டில் குடி இருக்கலாமா? அதனால் பாதகம் உண்டாகுமா?

இயற்கையின் திட்டத்தைச் சிந்தித்துப் பார்த்து அறிந்து கொள்ளாததனால்தான் இத்தகைய சந்தேகங்கள் எழுகின்றன.

இயற்கையை ஆராய்ந்து பார்த்தால் இயற்கை முழுவதும் கொலைக்களமாக இருப்பது விளங்கும். நாம் நடந்து போகும்பொழுது எத்தனையோ உயிர்கள் மிதிபட்டுச்சாகின்றன. ஆக இயற்கையில் எல்லா இடங்களும் கொலை நிகழும் இடங்களாகத்தான் இருக்கின்றன.

மரணம் ஏதோ ஒரு போக்கில் மனிதனுக்கு வந்து அமைகின்றது. இயற்கையாக வந்து அமையும் மரணம் நோயின் மூலமாக வருகிறது. விரோதத்தாலோ, திடீரென்று உணர்ச்சிவசப்பட்டோஒருவர் மற்றொருவரைக் கொலை செய்து விடுவது உண்டு. கோழை மனம் படைத்தவர்கள் தங்களுக்கு ஏற்பட்ட உடல் துயரத்தையோ, மனத் துயரத்தையோ பொறுத்துக்கொள்ள முடியாது தற்கொலை செய்து கொள்வதுண்டு. இப்படி வருகின்ற மரணம் செயற்கையில் அமைவதாகும். எந்த முறையில் அமைந்தாலும் உயிர் உடலை விட்டுப் பிரிந்து விடுகிறது. உடலை விட்டுப் பிரிந்த உயிர் என்ன ஆகிறது என்பது நமக்குத் தெரியாது. உயிரை விட்டுப் பிரிந்த உடலை மட்டும் அவ்விடத்திலிருந்து எடுத்து நெருப்பில் பொசுக்கியோ, பூமியில் புதைத்தோ அழித்துவருகின்றோம். மரணம் நிகழ்ந்த இடத்தில் மரணத்துக்குள்ளான உயிரோ, உடலோ இருப்பதில்லை. அதைக் குறித்து உயிர் உள்ளவர்கள் அச்சத்துக்கு ஆளாகிக்கொண்டிருக்கிறார்கள். அப்படி அச்சப்படுவது அறியாமையேயாகும். உயிரோடு இருப்பவர்கள் நமக்கு ஏதாவது தீங்கு செய்யலாம். ஆனால் செத்தவர்கள் நமக்கு எவ்விதத் தீங்கும் செய்ய முடியாது.

நாம் பற்றுமிக வைத்திருந்தவர்கள் காலமான வீட்டில் குடியிருந்தால் அவர்களைப்பற்றிய நினைவு அடிக்கடி நமக்கு வந்துகொண்டிருக்கும். அவர் நினைவு வரும்பொழுதெல்லாம் நாம் துயரத்துக்கு ஆளாகவேண்டிவரும். அதை முன்னிட்டுச் சிறிதுகாலம் அவ்வீட்டை விட்டு விலகி இருக்கலாம். அவ்வீட்டில் குடியிருப்பதால் அதைத் தவிர வேறு பாதகம் எதுவும் வந்துவிடாது. மனதிலுள்ள அழுக்கு நமக்குத் துயரத்தையும், பாதகத்தையும் உண்டுபண்ணி வருகிறது. பாதகம் நம் மனத்தில் இருக்கிறதேயன்றி புறத்தில் நிகழும் நிகழ்ச்சியில் இல்லை.

# ஆத்ம போதம்

( திரு. V. S. நரசிம்மன் )

வேதாந்த கிரந்தங்கள் சாதன நிலையையும், சித்தி நிலையையும் வர்ணிக்கின்றன. ஆத்ம சாதனத்தினால் அடையப்படும் பலன் உலகை நீத்த பிறகே கிடைக்கக்கூடிய (post-mortem) ஒன்று அன்று. ‘ உடலில் உயிர் தரித்திருக்கும் போது பேரானந்தப் பெருநிலையை அடைய லாம்’என்னும் தத்துவம் வேதாந்தத்தின் தனிப் பெரும் சிறப்பாகும். ‘ஜீவன் முக்தர்களின்’ விவரத்தை இங்குக் குறிப்பிட்டிருப்பது அந்த உண்மையை எடுத்துக் காட்டவே. உயிர் உள்ளபோதே விடுதலை பெற்றவர்கள்“என்றும் ஜீவன் என்ற நினைப்பிலிருந்து விடுபட்டவர் கள்” எனவும் பொருள் கூறுவர். அனுப வத்தை எல்லையாகக் கொண்டது, அனுபவத் தில் நிலைத்து இருப்பது என்று ஆத்ம போதம் வர்ணிக்கிறது.

ஜீவன் முக்தர்களுக்குச் சரீரம், மனம், புத்தி ஆகிய உபாதிகள் கிடையா. சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களால் அவர்கள் கட் டுப்படுத்தப்படுவதில்லை. சரீரத்தில் உள்ளவர் போல் நாம் அவரைக் காண்கின்றோம். சரீரம் அவருக்குத் தடை இல்லை. ஸ்ரீ ரமண மஹரிஷி அவர்களுக்கு அறுவை சிகிச்சை நடைபெற இருந்தது. டாக்டர் அவருக்கு மயக்க மருந்து தரவேண்டும் என்றார். எதற்கு மயக்கம்? இந்த நாற்காலியை அறுக்க மயக்கம் தர வேண்டுமா? அதைப் போன்றதே சரீரமும் என்று கூறி, மயக்க மருந்து இல்லாமல் தம் சரீரத்தில் அறுவை சிகிச்சையை அனுமதித் தார். இது எங்ஙனம் சாத்தியம் என்பதை ஆத்ம சாதகர்கள் அல்லாதார் புரிந்துகொள்ள முடியாது. சரீரத்தினின்று வெகு எளிதில் தம்மைப் பிரித்துக்கொள்வது அவர்களுக்குச் சாத்தியம். சுவாமி துரியானந்தர் அவர் களுக்கு முதுகில் ராஜபிளவை கண்டிருந்தது. சிஷ்யர்கள் பலரும் அதற்குச் சிகிச்சை செய்ய வேண்டும் என்று விரும்பினர். சுவாமிஜி அதற்கு அனுமதி தரவில்லை. ‘பிரக்ஞை அற்ற நிலையில் நான் இருக்கமாட் டேன்’ என மறுத்தார். சுவாமி பிரம்மானந் தர் அவரிடம், ‘இவர்கள் பொருட்டு நீ சிறிது நேரம் சரீரத்தினின்று ஒதுங்கி இரு’ என்று கூறினர். ஓர் அறையைச் சுத்தம் செய்யும் போது, நாம் அறையைவிட்டு வெளியேறி விடு வோம் அன்றோ? அதுபோன்று சரீரத்தினின்று வெளியேறி அவர் இருந்தார். அறுவை சிகிச்சையும் நடந்தது. குறிப்பிட்ட காலம் கழித்துச் சரீர உணர்ச்சிக்குத் திரும்பியதும், ‘தாயே ஜகதம்பா, வலிக்கின்றதே’ என்று கூறினர். சரீரத்தை எளிதில் கழற்றி வைக் கக்கூடிய ஒரு பொருளாக அவர்கள் கருதும் போது அது உபாதியாகுமா?

‘சத், சித், ஆனந்தம்’ என்னும் லக்ஷணங்கள் நம் சொருப விளக்கங்களாகின்றன. அடிப் படையில் நம் இயல்புகள் இம் மூன்றுமே. எனவே ஆத்ம இயல்பை உதறிய ஞானிகள் சச்சிதானந்த நிலையில் திளைத்து இருப்பார்கள். ‘ப்ரஹ்மவித் ப்ரஹ்மைவ பவதி – பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமாகவே ஆகின்றான்.’ இந்தத் தத்துவத்தை ப்ரமரகீட நியாயம் என்று கூறு வார்கள். ஒரு கூட்டில் அடைக்கப்பட்ட புழு பலமுறை குளவியால் கொட்டப்படும். அப் போது புழு, குளவியை எண்ணி லயித்து இருப்பதால், அதுவும் குளவி ஆகின்றது. ஆத்ம பாவனையில் மேலோங்கிய சாதகன் ஆத்ம சொருபமாகவே ஆகின்றான்.

எல்லாப் புழுக்களையும் குளவி எடுப்பதில்லை. குளவியாக மாறும் இயல்பு பொதிந்து கிடக் கும் புழு மட்டுமே மாற இயலும். சாதகன் ‘நானே பிரம்மம்’ என்று கூறுவதால் பிரம்மம் ஆவதில்லை. பிரம்மத்தின் அடிப்படை லக்ஷ ணங்கள் அவனிடம் பொதிந்து உள்ளன. எனவே தீவிரமான சாதனம் அவனை அந் நிலைக்கு எடுத்துச் செல்லுகின்றது.

तीर्त्वा मोहार्णवं हत्वा रागद्वेषादि राक्षसान् ।
योगी शान्तिसमायुक्त आत्मारामो विराजते ॥

मोह अर्णवं (மோஹ அர்ணவம்) மோகமாகிய கடலை तीर्त्वा (தீர்த்வா) கடந்து राग द्वेष आदि (ராக த்வேஷ ஆதி) விருப்பு வெறுப்பு ஆகிய राक्षसान् (ராக்ஷஸான்) அரக்கர்களை हत्वा (ஹத் வா) கொன்று शान्ति समायुक्तः (சாந்தி ஸமாயுக்த:) சாந்தமான மனநிலையுடன் ஒன்றி आत्मा रामः

(ஆத்மா ராம:) ஆத்மனில் திளைத்து இன்புற்று योगी (யோகி) யோகி विराजत (விராஜதே) விளங்குகின்றான்.

"மோகமென்ற கடலைக் கடந்து, விருப்பு வெறுப்பு ஆகிய அரக்கர்களை அழித்து, மனச் சாந்தியுடன் ஒன்றாகி, ஆத்ம இன்பத்தில் திளைத்து யோகி விளங்குகின்றான்."

அனைவருக்கும் தெரிந்த ராமாயணக்கதையை உள்ளடக்கிய உருவகமாக இப்பாடல் திகழ்கின்றது. ஸ்ரீராமன் கடலைக் கடந்து, அரக்கர்களை அழித்து, சீதையுடன் மறுபடியும் ஒன்று சேர்ந்து மகிழ்ச்சியில் திளைத்திருக்கின்றான். அதுபோன்று யோகி கடக்கும் கடல் மோகம், மயக்கம், அக்ஞானம் ஆகியவைகளாம். அவன் அழித்தது ராக, துவேஷத்தை. அதனால் அடையும் பயன் மனச்சாந்தி. இங்ஙனம் ஸ்ரீராமனைப்போல் 'ஆத்ம ராமனாக' யோகி திகழ்கின்றான்.

वाह्यानित्य सुखासक्तिं हित्वाऽऽत्मसुखनिर्वृतः ।
घटस्थदीपवत्स्वस्थः स्वान्तरेव प्रकाशते ॥

बाह्य (பாஹ்ய) வெளியில் உள்ள अनित्य (அநித்ய) நிலையற்ற सुख (சுக) சுகங்களில் आसक्ति (ஆஸக்திம்) ஈடுபாட்டை हित्वा (ஹித்வா) ஒதுக்கிவிட்டு आत्मसुख (ஆத்மசுக) ஆத்ம சுகத்தில் निवृतः (நிர்வ்ருத:) மன நிறைவு அடைந்து घटस्थ दीपवत् (கடஸ்த தீபவத்) குடத்தினுள் விளக்குப் போல் स्वस्थः (ஸ்வஸ்த:) தன்னில் நிலைபெற்று स्वान्तरेव (ஸ்வ அந்தரேவ) தனக்குள்ளே प्रकाशते (பிரகாசதே) பிரகாசிக்கின்றான்.

வெளியில் உள்ள பொருள்களால் விளையும் நிலையற்ற சுகத்தில் ஈடுபாட்டை அழித்து, ஆத்ம சுகத்திலேயே மன அமைதி பெற்றவனாக, குடத்தில் பிரகாசிக்கும் தீபம் போன்று, தன்னுள் தானே பிரகாசத்துடன் திகழ்கின்றான்.

விஷய சுகத்தில் கிடைக்கும் ஆனந்தம் போகியை அதில் திளைக்கச் செய்கின்றது. ஆனால் யோகியோ அதன் அற்பத்தன்மையை அறிந்து, மனதை உள்முகமாகத் திருப்பி ஆத்மஞானத்தை அடைந்து, ஆனந்தம் எய்துகின்றான். அவனுடைய ஆனந்த நிலையை உலகோர் அறியமாட்டார்கள். வெளியுலகுக்கு ஆட்டம், கொண்டாட்டம், அட்டகாசச் சிரிப்பு போன்ற செய்கைகளால் விஷய ஆனந்தத்தை அறிவிக்கலாம். ஆத்ம ஆனந்தம் அத்தகையது அன்று. குடத்தினுள் வைக்கப்பட்டுள்ள விளக்கின் பிரகாசத்தை வெளியில் இருந்து பார்க்க முடியாது. ஆனால் அந்தத் தீபம் குடத்தைப் பிரகாசிக்கச்செய்துகொண்டுள்ளது என்பதைத் தீபத்தை வைத்தவரே உணர்வார். அதுபோன்று ஆத்ம ஆனந்தத்தில் திளைக்கும் யோகிக்கே உண்மை தெரியும்.

उपाधिस्थोऽपि तद्धर्मैरलिप्तो व्योमवन्मुनिः ।
सर्वविन्मूढवत्तिष्ठेदसक्तो वायुवच्चरेत् ॥

मुनिः (முனி:) முனிவராக உள்ளவர் उपाधिस्थः अपि (உபாதிஸ்த: அபி) உபாதிகளோடு சேர்ந்து இருந்த போதிலும் तत् धर्मैः (தத் தர்மை:) அதன் இயல்புகளால் अलिप्तः (அலிப்த:) மாசு அடையாதவன் व्योमवत् (வ்யோமவத்) ஆகாயத்தைப் போல், सर्ववित् (ஸர்வவித்) அனைத்தையும் அறிந்தவன் मूढवत् (மூடவித்) மூடனைப்போல் तिष्ठेत् (திஷ்டேத்) இருப்பான் असक्तः (அஸக்த:) பற்று இல்லாது वायुवत् (வாயுவத்) காற்றைப் போல चरेत् (சரேத்) அலைந்து கொண்டிருப்பான்.

"உபாதிகளுடன் சேர்ந்து இருந்தபோதிலும் முனிவர் அவற்றால் ஆகாயத்தைப்போல் மலினப்படுவதில்லை. அனைத்தையும் அறிந்தவர் எனினும் மூடனைப் போல் நிற்பார். பற்றற்று வாயுவைப் போல் அலைந்துகொண்டே இருப்பார்."

பொருள்களில் ஏற்படும் மாசு ஆகாயத்தைப் பாதிப்பது கிடையாது. நல்ல வாசனையோ கெட்ட வாசனையோ, நல்ல உருவமோ கோர உருவமோ ஆகாயத்தில் தமது பாதிப்பை உண்டாக்க முடியாது. சரீரம், இந்திரியம், மனம் ஆகியவற்றின் இயல்புகளால் ஞானி கலங்குவதில்லை. சரீர தர்மம், இந்திரிய தர்மம், மனோ தர்மம் அவருக்கு மலினமாகாது. கீதையில் இந்த நிலை அற்புதமாக விவரிக்கப்பட்டுள்ளது. "பாரமார்த்த ஞானி தான் எதுவும் செய்வது இல்லை என்பதை உணர்ந்தவன். இந்திரியங்கள் இந்திரிய விஷயங்களை நாடிச் செல்கின்றன" என்னும் உண்மையில் உறுதியாக நிற்கின்றான்.

யோகியை ஸர்வவித், ஸர்வக்ஞன் என்று கூறுவார்கள். அறிய வேண்டிய அனைத்தையும்

அறிந்தவர் என்பது அதன்பொருள். உலகநிலை யில் வைத்துக்கருதப்படும்ஞானத்தின்எல்லாப் பகுதிகளையும் உணர்ந்தவர் என்று பொருள் கொள்ளக் கூடாது. அபரா வித்யா - கீழான கல்வியின் பல கிளைகளையும், எல்லா விக்ஞா னத்தையும் உணர்ந்தவரை ஞானி என்று வேதாந்தம் மதிப்பது இல்லை. பரா வித்தையை மேலான கல்வியை அறிபவனே யோகி; 'ஸா பரா யதா அக்ஷரம் அதிகம்யதே - எந்த வித்தையின் மூலம் அழிவற்ற ஆத்மாவை அடைகின்றோமோ அதுவே மேலானது.' "கஸ் மின்னு பகவன் விக்ஞாதே ஸர்வமிதம் விஞ் ஞாதம்ஃ பவதி-எதை உணர்ந்தால் எல்லாம் அறியப்படுகின்றதோ அது என்ன?" என்னும் வினவிற்கு விடையாகப் பரா வித்யா, ஆத்ம வித்யா குறிப்பிடப்படுகின்றன. அறிபவனை அறியாது, வேறு அனைத்தையும் அறிவது அக்ஞானம்— **To know everything else except the Knower is but ignorance**"என்று மகரிஷி ஸ்ரீ ரமணர் கூறுவார். ஸர்வக்ஞன் என்னும் பதத்தை இத்தகைய கண்ணோட்டத் துடன் பார்க்கவேண்டும்.

ஆத்ம ஞானிகள் வியவகார ஞானத்திலும் சளைத்தவர்கள் அல்லர். பண்டைக்காலத்தில் கல்வியில் தேர்ச்சி பெற்றவர் ஆழமாகவும், அகலமாகவும் படித்தவர் என்பதில் ஐயமில்லை. மொழியில் தேர்ச்சி என்றால் அதன் அனைத் துப் பிரிவுகளிலும் பிரமிக்கத்தக்க அறிவு பெற் றிருந்தனர். ஆதிசங்கரர் காஷ்மீரில் இருந்த சர்வக்ஞ பிடத்தில் ஏறி அமர்ந்தவுடன், 'இது காறும் யாரும் துணியாத இச்செயலைச் செய்த வர் யார்?' என்று ஆச்சரியத்துடன் பல பண் டிதர்கள் அவரைச் சூழ்ந்து கேள்விக் கணை களைத் தொடுத்தனர். அனைத்திற்கும் தக்க சமாதானம் கொடுத்த அவரைப் பெரிதும் போற்றினர் என்று சங்கரவிஜயம் உரைக்கும்.

'மூடவத்திஷ்டேத்'-மூடனைப்போன்றுஇருப் பான். தன் ஆணவத்தை முன் நிறுத்தி தன் னுடைய சொரூப நிலையை அவன் இழப்பது கிடையாது. எனவே அவன் அதிகம் வியவ காரத்தில் ஈடுபடாது உதாசினமாக இருப் பதை இது குறிக்கும். 'மூகவத்' ஊமையைப் போன்று—என்று ஒரு பாட பேதம் உள்ளது. அதுவும் பொருத்தமானதே.

வாயுவத் சரேத் — காற்றைப் போன்று திரி வான். காற்று யாரிடமும் விருப்பு வெறுப்புக் காட்டாது, தனது செயலைச் செய்துகொண்டு செல்கின்றது. தன்னிச்சையாக யோகி செல் வது வாயுவின் சஞ்சாரம்போன்றது. 'சாந்தோ மஹாந்தா நிவஸந்தி சந்தோ, வஸந்தவத் லோக ஹிதம் சரந்தோ — அமைதியாக மகான் கள் வஸந்தகாலத் தென்றல் உலகிற்கு நன்மை யைச் செய்வது போன்று இங்குமங்கும் செல் கின்றனர்' என்று மஹான்களைத் தென்றலுடன் ஒப்பிட்டு விவேக சூடாமணி புகழ்கின்றது.

பிராரப்தத்தின் பலனை ஞானி நேரடியாக அனுபவிக்கின்றாரா என்பதை அவரே அறி வார். அப்படியே அவர் அதில் திளைத்துக் காணப்படினும், நிர்மல ஆகாசம் போல் கர்மத் தால் மலினப்படுவதில்லை. உதாசீன பாவத் துடன் மூடனைப் போல் இருப்பார். கட்டுப் பாடற்று வாயு சஞ்சரிப்பதுபோன்று அலைவார் என்றும் கொள்ளலாம்.

**"பாலரோடு பேயர்பித்தர் பான்மையென நிற்பதுவே**
**சீலமிகு ஞானியர்தம் செய்கை பராபரமே"**

என்னும் பாடலும் ஒத்து நோக்கற்குரியது.

மாண்டுக்ய காரிகை கூறுவதாவது: "ஆத்மாவின் சொரூபத்தை இத்தகையது என்று உணர்ந்து அத்வைதத்தில் உனது சிந் தனையை நிலைபெறச் செய். அத்வைத அனு பவத்தை உணர்ந்து, ஜடம்போன்று உலகில் திரியவேண்டும்."

நமக்குத் தேகம், மனம் ஆச்ரயமாக (தங்கு மிடமாக) உள்ளன. ஞானிக்கு இதைத் தவிர 'ஆத்ம ஆச்ரயம்' உள்ளது. தேகத் தில், மனதில் நிலைபெறுவது நமக்கு இயல்பு, எளிது. அதுபோன்று ஆத்மாவில் நிலை பெறுவதும் அவருக்கு எளிது. அப்போது தேகதர்மம் அவரைப் பாதிக்காது. பொருளில் உள்ள கெட்ட வாசனை ஆகாயத்தையோ, காற்றையோ பாதிப்பது இல்லை. அதுபோன் றதே ஞானியின் நிலையும். உபாதியுடன் காணப்பட்டாலும் அதன் ஆளுகைக்கு ஞானி கள் உட்பட்டவர்கள் அல்லர். இந்தத் தத்து வத்தை அனுபவ ரீதியாக உணரலாமே அன்றி அறிவு பூர்வமாகவோ வாதத்தினாலோ மன சமாதானத்தினாலோ உணரமுடியாது.

# ஸ்ரீமத் பாகவதம்

(சுவாமி ஸதானந்தர்)

அத்தியாயம்—6

வியாசர் வினவினர்: "தேவரிஷியே, சாதுர் மாஸ்யம் முடிந்து அந்தணர்கள் அவரவர் இருப்பிடங்களுக்குத் திரும்பிய பிறகு சிறு பையனுகிய நீர் என்ன செய்தீர்? நாள்தோறும் என்னென்ன ஆத்ம சாதனங்கள் செய்து நேரத்தைக் கழித்தீர்? அப்பொழுது வாய்த் திருந்த சரீரத்தை எப்படி உகுத்தீர்? காலம் அனைத்தையும் மறைத்து வைத்து விடுகிறது; அனைத்தையும் விழுங்கி விடுகிறது. அப்படி இருக்கத் தங்களுக்கு எப்பொழுதோ நிகழ்ந்த பூர்வஜன்ம நிகழ்ச்சிகள் எப்படி ஞாபகத்தில் இருக்கின்றன?"

நாரதர் சொன்னர்: "என் தாய்க்கு நான் ஒரே மகன். பெண்பாலர்க்கு இயல்பாகவே பயமும், நிராதரவான நிலைமையும் உண்டு. அதிலும் பணிப்பெண்ணுக இருந்த என் தாயாருக்குச் சிரமங்கள் அதிகமாகவே இருந்தன. என்னைப் பாதுகாப்பதற்கு யாரும் இல்லை. ஆகையால் என் தாயாருக்கு என்னைப் பற்றிய கவலை மிக அதிகம். என்மேல் அவர் மிக்க அன்பும் பாசமும் உயிரும் வைத்திருந்தார். என் நலன் ஒன்றே அவருக்கிருந்த கவலை. பிறரைச் சார்ந்து வாழ்கிற அந்த வாழ்வில் அவர் என்ன தான் என்னைச் சீராட்டி, படிக்க வைக்க விரும்பினுலும் அவைகளை எல்லாம் நிறைவேற்ற முடியவில்லை. பொம்மலாட்டத் தில் சூத்திரதாரி இயக்குகிற பிரகாரம் பொம் மைகள் செயல் புரிவன போன்று என் தாயார் சுதந்திரம் ஏதும் இன்றி இருந்தார். எனக்கு அப்பொழுது வயது ஐந்து ஆகியிருந்தது. அப்பொழுது இவ்வுலகைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. அம்மாவோடு நானும் அந்தணக்குடும்பத்திலேயே வாழ்ந்துவந்தேன். சிறுவனுய் இருந்தாலும் என் தாயாருடைய மனக்கவலைகளும், அபிலாஷைகளும் எனக்கு விளங்கியிருந்தன. என் தாயாருடைய கவலை களையும் கஷ்டங்களையும் போக்குவது எப்படி என்பதில் நான் கருத்துடையவனுய் இருந் தேன். அம்மாவின் பராமரிப்பிலிருந்து நான் பிரிந்தாலன்றி அவர் கவலைகள் தீரா. பிரிவதற் கேற்ற சந்தர்ப்பத்தை நான் எதிர் நோக்கி இருந்தேன். இங்ஙனம் சிலகாலம் கழிந்தது. ஒரு நாள் விடியற்காலம் அம்மா வீட்டிலிருந்து பால் கறந்து வருவதற்காகப் பட்டிக்குப் போனுர். அப்பொழுது வழியில் ஒரு நாகத்தின் மேல் காலை வைத்து விட்டார். அந்தச் சர்ப்பம் அவரைத் தீண்டியது. அவர் உடனே உயிர் துறந்தார். இந்தச் சம்பவத்தைக் குறித்து நான் சிறிதும் துயரப்படவில்லை. கடவுளின் செயல் என்றே நான் அதைப் பொருள்படுத்தி னேன். தாயார் இறந்த பிறகு நான் அந்தண ரின் வீட்டை விட்டு வெளியேறி வடதிசை நோக்கி நடந்துபோனேன்.

காடு மலைகளையும், நாடு நகரங்களையும், பொன் கொழிக்கும் பூமிகளையும் அமைதியான மலை அடிவாரக் கிராமங்களையும் பார்த்துக் கொண்டே போனேன். அடுக்கடுக்கான மலை களும் அவைகளின் வர்ண ஜாலங்களும் கண் கொள்ளாக் காட்சிகளாக இருந்தன. பச்சை மலை, கொல்லிமலை, பொன்மலை, வெள்ளிமலை, இரும்புமலை, சஞ்சீவிமலை, பவளமலை, சித்தர் மலை என்று அவைகளை வர்ணிக்கலாம். உலோகத் தாதுக்களைக் கொட்டி வைத்தது போன்று அவைகளின் வர்ணங்களும் அவை களின் மேல் வானுற ஓங்கி வளர்ந்திருந்த மரங்களும் புஷ்பங்களும் கண்ணுக்கு விருந் தாய், குளிர்ச்சியாய் இருந்தன. மெல்லிய தென் றலில் அசைந்தாடிய பூந்தளிர்களையும், பூங் கொடிகளையும் கண்டேன். தெள்ளத்தெளிந்த நீர் நிறைந்த ஏரிகளையும் அவற்றில் நீர்வாழ் பறவைகளையும், மீன் வகைகளையும், நீரில் வளரும்அருமைமிக்க மலர்களையும் பார்த்தேன். அவற்றில் தேவர்களும் கடவுளர்களும் நீராடு வதுபோன்ற காட்சி தோன்றியது. தேனீக்கள் பூக்களில் தேனைச் சேகரித்த வண்ணமிருந்தன. காட்டுப் புஷ்பங்களும் தேனீக்களும் குழந்தை களைப் போன்று கிசுகிசு மூட்டி விளையாடின. பறவைகளின் மகிழ்ச்சியான ஓசை அந்த இடத்தையே இன்பம் நிறைந்த இடமாக்கியது. கடவுளின் மகிமைகளைப் பார்த்து இங்ஙனம் அதிசயித்துக் கொண்டே போனேன். எதிரே

மிகவும் அடர்ந்த வனம் ஒன்று தென்பட்டது. அதைப் பார்க்கவே பயமாய் இருந்தது. மிகவும் அடர்ந்த மூங்கில் புதர்களும் செழித்த கோரை வயல்களும் அந்தக் காட்டுக்கு வேலி போல் இருந்தன. அது கடக்க முடியாதது போன்று இருந்தது. விஷப் பாம்புகளும் கொடிய விலங்குகளும் சஞ்சரித்தன. சிரமப்பட்டு எப்படியோ அவ்வனத்தினுள் பிரவேசித்தேன். நீண்ட பயணத்தினாலும், நடையினாலும் பசியும், தாகமும், உடம்பு வலியும் உண்டாயின. களைப்பும் சோர்வும் உடலை வாட்டின. ஆகவே ஆங்கு ஓடிய சிற்றோடையின் தெள்ளிய நீரில் நீராடினேன். அதன் அமிர்தமான ஜலத்தைப் பருகினேன். தாயினும் சாலப் பரிந்து அந்தத் தீர்த்த தேவி என் சிரமங்களையெல்லாம் ஏற்றுக்கொண்டாள். மனதும் உடலும் புத்துயிர் பெற்றன. பெரிய ஆலமரம் ஒன்றின் கீழ் அமர்ந்து ஏகாந்தத்தில் அமைதியே வடிவெடுத்த தெய்விகச் சூழ்நிலையில் ஸ்ரீ ஹரியைத் தியானம் பண்ணினேன். 'கடவுள் எங்கும் நிறைந்தவர். அவர் தூணிலும் இருக்கிறார்; துரும்பிலும் இருக்கிறார். முக்கியமாக மக்கள் ஹிருதய குகையில் அவர் கோவில் கொண்டருளியுள்ளார். இதை உணர்ந்தால் கடவுள் எழுந்தருள்வார்; பிரத்யக்ஷமாவார். குழந்தையும் தெய்வமும் கொண்டாடுமிடத்தில் என்பார்கள். இடையறாத ஸ்மரணை, நினைப்பு, தியானம் மூலம் பக்தர்கள் கடவுளோடு ஒன்றாகி விடுகிறார்கள்' என்பன போன்ற அருள்வாக்குகளை, தத்துவ உபதேசங்களை அந்த ரிஷி சிரேஷ்டர்களிடம் கேட்டிருக்கின்றேன். ஒருமித்த மனதுடன் அந்தப் பரம பிரபுவைத் தியானம் பண்ணினேன்.

பகவானைத் தவிர மனதில் எந்த ஆசையும் இல்லை. ஸ்ரீமந் நாராயண மூர்த்தியை என்று தரிசிப்பேன் என்னும் பேராவல் எழுந்தது. கண்ணீர் மல்கப் பகவானை இடையறாது பிரார்த்தித்தேன். பரம கிருபாமூர்த்தி, தயாநிதி, கருணாசாகரம் ஆகிய பகவான் என் உள்ளத்தில் எழுந்தருளினார். மோஹனப் புன்னகையும் கருணை நிறைந்த கண்களும் கூடிய மங்களமான அந்தத் திவ்விய தேஜோமயமான வடிவத்தை என்னென்பேன்! உடம்பெல்லாம் மயிர்க்கூச்சல் எடுத்து ஆனந்தத்தில் மூழ்கி இருந்தேன். மனம் முழுவதும் அப்பரம பிரபுவினிடத்து லயித்து இருந்ததால் ஜீவபோதம், தன்னைப் பற்றிய உணர்வு எழ இடமே இல்லை. பகவானும் பக்தனும் ஒன்றே. எப்பொருளைத் தியானித்தேனோ அதற்கு நான் அன்னியமானவன் அல்லன் என்பதை அறிந்தேன். ஆனால் வர்ணனைக்கு எட்டாததும் உலகத் துன்பங்களை எல்லாம் போக்க வல்லதும் வாழ்நாள் எல்லாம் நான் அடைய முயன்றதும் ஆன அப்பரம பிரபுவின் காட்சி நீடித்திருக்கவில்லை! மறைந்துவிட்டது. எம்பெருமானின் காட்சி மறைந்ததும் மறுபடியும் மனம் கொந்தளித்தது. என் இருக்கையினின்றும் எழுந்து என் அண்ணலை, ஆருயிர்த் தலைவனைத் தேடினேன். நான்மீண்டும் அமர்ந்தேன். என்ன முயன்றும் அப்பரம பிரபுவை மறுபடியும் காண இயலவில்லை. ஒருக்ஷணம் எனக்குக் காட்சி தந்து ஆனந்த மூட்டி என் பிரபு மறைந்துபோனதைப்பற்றி மிகவும் துயரமடைந்தேன். பக்தவத்சலன் ஆகிய ஸ்ரீ ஹரி எனக்கு ஆறுதல் அளித்தல் பொருட்டு இங்ஙனம் இயம்பினார்: "குழந்தாய், இனி இந்த ஜன்மத்தில் உனக்கு என் காட்சி கிடைக்காது. யாருக்கு இன்னும் உலக ஆசைகள் போகவில்லையோ, அதன் சாயை, அதன் பகுதிகள் இன்னும் மனதில் இருக்கின்றனவோ அவர்கள் இன்னும் நிறைநிலை அடையவில்லை. அவர்கள் கடவுளைக் காணமுடியாது. என்னைக் காணவேண்டும் என்கிற உன் ஆவலை அதிகப்படுத்திடவே, தீவிரப்படுத்தவே இப்போது ஒருதடவை உனக்குக் காட்சி அளித்தேன். என்னையே கதியாகக்கொண்டு பக்தர்கள் நாளடைவில் ஆசைகளை முற்றும் துடைத்து விடுகின்றனர். நீ நெடிது சாது சங்கத்தில் வாழ்ந்து, அவர்களுக்குத் தொண்டுபுரிந்து, அதன் விளைவாக என்னிடத்து மாறாத பக்தி பெறுவாயாக. அப்பொழுது பிறப்பு இறப்பைத் தாண்டி சாசுவதமாக என்னில் வாழ்வாய். உன் மனது முழுவதுமாக எனக்கு அர்ப்பணிக்கப்பட்டதால் இனி அதை உன்னால் என்னிடமிருந்து பிரிக்கவோ, என்னை நினைக்காமல் இருக்கச்செய்யவோ முடியாது. என்னிடத்து மனதைக் கொடுத்தவர்கள் மரண காலத்திலும் என்னையே நினைத்திருப்பார்கள்." இங்ஙனம்

இயம்பிவிட்டுப் பகவான் மறைந்து போனார்.

"உன் கருணைப் பிரவாகத்தைத் தாகமாய் நாடினவர்களை இந்த ஜகத், மாயை வாதிக்க வல்லதோ? அடியார்களுக்குத் தோன்றாத் துணையாய் இருப்பவனே, நான் முயன்றாலும் உன்னிடத்திருந்து பிரிந்துகொள்ள முடியாது. என்னைப் பற்றிப் பிடித்திருப்பவனே, தாயின் இடுப்பில் இருக்கும் குழந்தையைப் போன்று நான் நிர்ப்பயமாய் இருக்கிறேன். அன்பர் தமக்கான நிலை பொருளே என்தன் உயிர்க்கு ஆதரவு தருவாயே" என்று நான் பிரார்த்தித்து உருகி நின்றேன். நான் பெரிய பாக்கியசாலி. வாழ்வின் உண்மைப் பயனைப் பெற்று வந்தேன் என்று திருப்தியடைந்தேன். மீண்டும் மீண்டும் அப்பரம பிரபுவை வணங்கினேன். அன்று முதல் என் அகங்காரம், தற்பெருமை, சந்தேகம் எல்லாம் அறவே போய் விட்டன.நான் இடையறாது கடவுள் நாமத்தைப் பாடிக்கொண்டே இருந்தேன். மீண்டும் கடவுள் காட்சியை எதிர்பார்த்துக்கொண்டே தேசந்தோறும் கடவுள் நாம சங்கீர்த்தனம் பண்ணிக்கொண்டே சஞ்சாரம் செய்தேன். இப்படி இருக்கும்போது ஒருநாள் என் தூய மனதில் மரணவேளை வந்துற்றதை உணர்ந்தேன். பழைய சரீரம் விழுந்தது. புதிய தேஜோமயமான சரீரம் பெற்றேன். அதன் பிறகு பிரளயம் வந்தது. இவ்வுலகம் எல்லாம் அவ்யக்த நிலைக்குப் (தோன்றா நிலை) போயின. இப்பிரபஞ்சத்தைத்துடைத்துவிட்டுப்பகவான் ஸ்ரீ ஹரியானவர் ஜலப் பிரளயத்தில் பள்ளி கொண்டிருந்தார். அப்பொழுது அவர் மூச்சுடன் சேர்ந்து நான் அவருடைய சரீரத்தில் ஒடுங்கினேன். தூக்கம் போன்ற இந்த நிலையில் ஆயிரம் யுகங்கள் கழிந்தன. மீண்டும் சிருஷ்டியில் விருப்பம் கொண்டவராய்ப் பகவான் தன்னில் தானாய் இன்புற்றிருக்கிற நிலையினின்று கீழிறங்கி வந்தார். பகவானுடைய சங்கல்பத்தினால் அவருடைய இந்திரியங்களிலிருந்து தோன்றிய மரீசி, அங்கிரர் மற்றும் முனிவர்களுடன் நானும் தோன்றினேன்.

கடவுள் அருளால் நான் பிரம்மச்சரியம் காத்து வருகிறேன். அன்றுமுதல் மூன்று உலகங்களிலும் பாடிச் சஞ்சரித்து வருகிறேன். எங்கணும் எப்பாரும் அவர் புகழ்பாடி வருகிறேன். மூன்று உலகங்களிலும் எதுவும் என்னைத் தடைப்படுத்த மாட்டாது. நான் மீட்டும் வீணை தேவாம்சம் பொருந்தியது. அது எழுப்பும் நாதம் நாதப் பிரம்மத்தைக் குறிப்பதான–ஏகாக்ஷரமான–அனாகத தொனியான ஓங்காரமாகும். இந்த வீணா கானத்தை மிக்க ஆர்வத்துடன், ஈடுபாட்டுடன் நான் வாசித்து ஹரிபஜனம் பண்ணுகிறேன். நான் பஜனை பண்ணும் போதெல்லாம் பகவான் ஸ்ரீ ஹரி என் ஹிருதயத்தில் எழுந்தருள்கிறார். வியாசரே, காம காஞ்சனத்திலும் உலக ஆசைகளிலும் உழல்கின்ற மனதுக்கு ஹரிபஜனம் பண்ணுதல் நல்லது. அது பேரலையை எழுப்பிச் சிற்றலைகளையெல்லாம் தன்னுள் அடக்கிக் கொண்டு விடுவது போன்று ஆகிறது. காமகாஞ்சனத்தில் உழல்கிற மனதுக்கு யோகம் ஒரு நலனையும் செய்யாது. ஆனால் ஹரி பஜனமும் பகவத் பக்த சேவையும் பக்தர்களுக்கு நிரந்தரமான ஆறுதலைத் தருகின்றன. வியாசரே, பாபமற்றவரே, தங்கள் கேள்விகளுக்கெல்லாம் பதில் அளித்துவிட்டேன் எனக் கருதுகிறேன்.எனது பிறப்பு முதல் வாழ்க்கைச் செயல்கள், ஜீவிதத்தின்பயன் முக்தியடைதல் ஈறாக யாவற்றையும் தங்கள் திருப்திக்காக விரிவாகச் சொன்னேன்.

சூதர் சொன்னார்: "இங்ஙனம் இயம்பிவிட்டுத் தேவரிஷி நாரதர் வியாசரிடம் விடைபெற்றுச் சென்றார். தம் கால்கள் போன பக்கம் அவர் வீணையை மீட்டிக்கொண்டு ஹரிபஜனம் செய்துகொண்டு போனார். உலக விஷயங்களையே கேட்டுச் சலித்துப்போன காதுகளுக்கு அவருடைய தேவகானம், கடவுள் புகழ், அமிர்தமாக வர்ஷிக்கின்றன. வீணையை இனிமையாக மீட்டியவாறு கடவுள் திருவடிகளில் மனம் லயித்துத் தன்னை மறந்து கடவுளைப் பற்றியே பாடும் அந்தச் சீர்அடியார் வாழ்க, வாழ்கவே!"

## அத்தியாயம்—7

சௌனகர் கேட்டார்: "சூதரே, நாரதர் போன பிறகு அவருடைய போதனையை நிறைவேற்ற வியாசர் என்ன செய்தார்?"

சூதர் சொன்னது: "உத்தமர்களே, புனித சரஸ்வதி நதியின் மேற்குக் கரையில் சம்யப்பிராசா என்கிற தெய்வீகமான ஆச்ரமம் ஒன்று இருக்கிறது. அந்த ஆச்ரமத்தைச் சுற்றி மிகவும் அடர்த்தியாகக் கனிவர்க்க மரங்கள் நிறைந்

திருந்தன. அந்த ஆச்ரமத்தில் ஒருநாள் பெருமை மிக்க வியாசர் தியானத்தில் ஆழ்ந் திருந்தார். அவருடைய பக்தியின் பிரபாவத் தால் அவர் தூய மனது பரிபூரணமாக வாசு தேவரிடத்தில் ஈடுபட்டிருந்த காரணத்தால் அப்பரம பிரபு அவருக்குக் காட்சி கொடுத்தார். அக்காட்சியில் அவர் கடவுளின் வெறும் தோற்ற மாத்திரமான இச்சா சக்தியின் வடிவ மான மகாமாயையை, தேவமாயையைக் கண் டார். இந்த மாயையின் ஆதிக்கத்தாலேயே ஜீவன் தனது ஆதிமூலமாகிய ஆத்மாவின் அம் சமாக, கிரணமாக, அலையாக இருந்த போதி லும், முக்குணங்களுக்கு அப்பாற்பட்ட நிலையில் தான் இருந்த போதிலும் தன்னைக் குணம் உடையவனாக அவைகளின் ஆதிக்கத்துக்கு உட்பட்டவனாகக் கருதிக்கொள்கிறான். இப்படிக் கருதுவதால் உண்மையில் இக்குணங்களால் இயற்றப்படும் கர்மங்களுக்குத் தான் கர்த்தா என்கிற கர்த்ருத்வம் கொள்கிறான். இந்த மாயையின் கைவண்ணம் மேலும் எப்படியெல் லாம் செயல்படும், என்ன என்ன மாயையை, மயக்கத்தை அது படிப்படியாக விளைவிக்கிறது என்பதும் அக்காட்சியில்அவருக்குத்தெரிந்தன. ஸ்ரீ கிருஷ்ண பக்தியின் மூலம் இம்மாயையை வெல்லலாம், ஸ்ரீ கிருஷ்ண பக்தி எல்லாத் தீமைகளையும் வெல்ல வல்லது என்பதையும் மஹரிஷி அக்காட்சியில் கண்டார். வல்லமை மிக்க முனிவராகிய அவர் இக்காட்சியை ஆதாரமாகக் கொண்டு அறியாமையில் உழ லும் மன்பதைக்குத் தலையாய நன்மை செய்ய வல்ல இந்தப் பாகவதத்தை இயற்றினார். இந் தத் திவ்வியபுராணத்தைக்கேட்டாலே உள்ளத் தில் ஸ்ரீ கிருஷ்ணபக்தி வளரும். அந்தப் பக்தி உலகப்பற்றுக்களையும், காம காஞ்சனப்பற்று தல்களையும் அறவே அழித்துவிடும். விசேஷ மான இந்த உத்தம புராணத்தைஇயற்றிவிட்டு மீண்டும் அதைப் படித்துப் பார்த்தார். முதன் முதல் உலகப்பற்று ஏதும் அற்ற, தமது பிர சித்திபெற்ற திருக்குமாரன் சுகருக்குப் போதித் தார். அதை ஏற்பதற்கு ஏற்ற மிக மிக உத்தம பாத்திரம் அவர்.

சௌனகர் கேட்டார்: "சூதரே, சதாசர்வ காலமும்பரபோதத்தில் மனம் நிலைபெற்றவரும் எந்த உலகப்பற்றும் இல்லாதவரும் பிரபஞ்ச நிலைக்கு மனம் கீழே இறங்கி வராதவரும் ஆன பெருநிலையில் இருந்த அந்தச் சுகதேவ ருக்கு எங்ஙனம் இந்தப் பிரமாண்டமான புரா ணத்தைக் கேட்கவும் கற்கவும் சாத்தியமா யிற்று? எந்த மன நிலையைப் பெறுவதற்காக இப்பாகவதத்தைப் படிக்கிறோமோ அந்த மேலான மன நிலையில் அவர் நிலைபெற்றவராய் இருந்தார். இதை அவர் ஏன் கற்றார்?"

சூதர் பதில் சொன்னார்: "முனிவருள் முதன் மையானவரே, பரபோதத்தில் நிலைத்திருப்ப தன் விளைவாகப் பேரானந்தத்தில் திளைத்திருப் பவர்கள் இந்த உலகத்தனைகள் எதிலும் கட் டுப்படமாட்டார்கள். உலக ஆசைக்கு அப்பாற் பட்டவர்களாக அவர்கள் இருக்கிறார்கள். அப் படிப்பட்டவர்களுக்கு இயல்பாகவே ஸ்ரீ ஹரி யிடம் பேரன்பு ஊற்றெடுக்கிறது. பேரறிவின் விளைவு பேரன்பாக ஊற்றெடுக்கிறது. அறிவே கடவுள். அன்பே கடவுள். அன்புக்காக அன்பு. பக்திக்காகப் பக்தி. எந்தப் பிரதிபலனை யும் எதிர்ப்பார்த்தன்று அவர்கள் பக்தி செய்வது. அன்பு செலுத்துதற்குரிய பொருள் வணக்கத்துக்குரிய பொருள் சரணடைவதற் குரியபொருள் ஆண்டவனைத்தவிர வேறு எது உள்ளது? வானுற உயர்ந்த மலையும் அகண்ட கடலும் வானமும் மனதைக் கொள்ளை கொள்கின்றன. ஆண்டவன் உள்ளம் கவர் கள்வன், ஜகன்மோஹனன், மனமோஹனன். அவனிடத்திருந்து நமது மனதை மீட்கவே முடியாது.கடலில்விழுந்த நீர்த்துளியைப் பிறகு தனியே பிரிக்க முடியுமா? ஆத்ம ஞானத்தின் மிக உயர்ந்த நிலை பராபக்தி. ஆண்டவன் பெரிய பொருள், மிக உயர்ந்தவன், நல்லவன், சிறந்தவன், கருணைமிக்கவன், புகழ்மிக்கவன், மகிமை நிறைந்தவன். அவனில் தன் மனதைப் பறிகொடுப்பதைத் தவிர ஜீவனுக்கு வேறு என்ன செய்ய முடியும்? ஆகவே சுகர் ஹரிகதா காலக்ஷேபத்தில் ஈடுபட்டதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது? ஞானானந்தம், கிருஷ்ணா னந்தம், ராமானந்தம் எல்லாம் ஒன்றே. ரிஷி புங்கவர்களே, இப்போது கிருஷ்ண கதாமிர் தத்தின் முதல் பகுதியாக ராஜ ரிஷியாகிய பரீக்ஷித்தின் பிறப்பு, நற்செயல்கள், முடிவு இவைகளைப் பற்றியும் பாண்டவர்களின் திவ் விய ஜீவிதம் பற்றியும் பகர்கிறேன்.

# குட்டித் திருவாசகம்

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன், M. A.)

"மனம் கட்டுப்பாடு இல்லாமல் உண்மையைப்பற்றிய அறிவும் இல்லாமல் யார் இருக்கிறனே, அவனுடைய இந்திரியங்களாகிய குதிரைகள், ஒரு சாரதியினுடைய முரட்டுக் குதிரைகளைப் போல, அடக்க முடியாதவைகளாக ஆகிவிடுகின்றன" என்பது கடோபநிஷதக் கருத்து ஆகும்.

இந்திரியங்களாகிய குதிரைகள் அடக்க முடியாதபடி இயங்கத் துவங்குகின்றன. இந்திரிய வயமாகி உடம்பை மட்டுமே கருதி உடலை ஓம்புவது தவறு. ஆன்ம ஈடேற்றம் கருதி, இறைவனை நினைப்பதற்கு ஆதாரக் கருவியாகிய மனம் அமைந்துள்ள இடம் இவ்வுடம்பு. இறைவனை நினைப்பதற்குக் கருவியாக அமைந்துள்ள மனதின் இருப்பிடம் உடம்பு.

மனதை உயர்ந்த பொருளிடத்தே செலுத்துகின்றபோது, அது மேலான தன்மை அடைகிறது. இறைவனைக் காட்டிலும் பிரபஞ்சத்தில் உயர்ந்தபொருள் எது? எதுவும் இல்லை. அவனை மனதிலே எண்ணுவதைவிட மேலான இயல்பு எது? எதுவும் இல்லை.

"என்னை நினைக்கப் பணித்த அருட்கடலே! உன்னையன்றி ஒரு தெய்வம் காண வழுத்தக் கடவனே!' — உன்னையே நான் எப்போதும் நினைத்துக்கொண்டிருக்குமாறு கட்டளை இட்ட அருள்கடலே! உன்னைத் தவிர வேறு ஒரு தெய்வத்தை நான் கண்ணுலும் காண்பேனே? இல்லை வணங்கத்தான் செய்வேனு? இரண்டும் இல்லை.

சிவனே! பார்த்தால் உன்னைப் பார்ப்பேன். வணங்கினுல் உன்னை வணங்குவேன். உன்னை அன்றி வேறு தெய்வத்தைப் பார்க்கவும் மாட்டேன்; வணங்கவும் மாட்டேன்."

அவருடைய மன உறைப்பை, உறுதியை இதில் காணலாம். திக்குத் தெரியாத வாழ்வில், குறிக்கோள் இல்லாத நிலையில் 'உன்னை அன்றி வேறு தெய்வத்தை நான் வணங்க மாட்டேன்' என்கிறுர்.

இலட்சியவாதிக்குத் தெளிவான நோக்கு இருந்துதான் ஆகவேண்டும். அதிவீரராமர் இலட்சியவாதி. பிறவிப் பிணியை அறவே ஒழிக்கவேண்டும் என்ற தெளிவான நோக்கு அவருக்கு இருந்தது. அதற்குச் சிவனின் திருவடிகளைப் பற்றிக்கொண்டார். ஏன்?

பிறவிப் பெருங்கடலை நீந்துவதற்கு, இறைவனின் திருப்பாதங்கள் தெப்பமாக உதவுகின்றன. இறைவன் திருவடிகளாகிய தெப்பத்தைப் பற்றிக்கொண்டால், பிறவியாகிய பெருங்கடலை நீந்திக் கடந்து, முக்தியாகிய கடலை அடையலாம்.

அதிவீரராம பாண்டியருக்கு இலட்சியத் தெளிவு இருந்தது. எனவே, "உனை அன்றி ஒரு தெய்வம் காண வழுத்தக் கடவனே?" என்கிறுர்.

"உள்ளேன் பிறதெய்வம் உன்னை அல்லாது
எங்கள் உத்தமனே!"

என்பது வாதவூரர் அருள்வாக்கு.

"வேனில் சிலைவேள் தொடுகணைக்கும்
விளங்கும் மகளிர் உளம்கவற்றும்
பானல் கொடிய விழிவலைக்கும்
பற்ருய் வருந்தி அனுதினமும்
ஈனத் துயரக் கடல் அழுந்தும்
எனையும் பொருளா அடிமைகொண்ட
ஞானத்து உருவே! தமிழ்க்கருவை
நம்பா! பொதுவில் நடித்தோனே!"

'சிற்றின்ப உணர்வை ஊட்டக்கூடிய காலம் இளவேனில் காலமாகிய வஸந்த காலம் ஆகும். இன்ப உணர்வை ஊட்டுபவன் மன்மதன், அவன் கையிலே உள்ள வில் கரும்பு வில். அம்பு மலர் அம்பு. இம் மன்மதன் இன்ப உணர்வை ஊட்டுவதற்காக எய்யக் கூடிய மலர்க்கணைக்கும், தம்மிடத்திலே வசீகரப் படுத்தும் பெண்களின் கண்களாகிய வலைக்கும் இலக்காகி வருந்தி, இழிந்த துன்பக் கடலில் அழுந்திக் கிடக்கும் என்னையும் ஒரு பொருளாக எண்ணி ஆண்டுகொண்ட ஞான முதல்வனே! தமிழால் துதி செய்து வழிபடும் திருக்கருவை என்னும் தலத்திலே எழுந்தருளியுள்ள இறைவனே! சித் சபையில் ஆனந்தத் தாண்டவம் புரியும் நடராஜப் பெருமானே! உனது பெருங்கருணைத் திறத்தை எவ்வாறு

புகழ்ந்துரைப்பேன்!' என்று கூறுகிறார் அதி விரராம பாண்டியர்.

"உடல் உணர்ச்சியை ஒதுக்கித் தள்ளினால் ஒழிய, பரத்தின் காட்சி வாய்க்காது" என்பது ஆன்றோரின் அருள் விருந்து.

உடல் உணர்ச்சி தலைப்பட்டு, இல்லற இன்ப வாழ்வில் மிகுதியும் ஈடுபட்டவர் அவர். சிற்றின்ப வேட்கையில் எண்ணம் கொண்டு, மாதரோடு சேர்ந்து நடத்துகின்ற இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டிருந்த அதிவிர ராம ருக்கு, அவ்வாழ்க்கையில் வெறுப்பும், பரம் பொருளில் நாட்டமும் ஏற்பட்டன.

"அனுதினமும் ஈனத் துயரக் கடலில் அழுந் தும் எனை" என்கிறார். 'நாள்தோறும் இழிந்த இல்லற வாழ்வாகிய துன்பக் கடலில் விழுந்து அழுந்துகின்ற என்னை' என்கிறார்.

உடல் உணர்வை ஒதுக்கித் தள்ளவேண் டும், பரம்பொருளாகிய இறைவனுடைய காட்சியைப் பெற்று, அந்த ஆனந்தப் பேரின் பப் பெருவாழ்வில் திளைக்கவேண்டும் என் னும் நல் உணர்வு அவருக்கு ஏற்படுகிறது.

"விவேகத்திலும் வைராக்கியத்திலும் நன்கு உறுதி பெற்றன பிறகு, ஒருவன் உலக வாழ்க் கையில் ஈடுபடலாம்" என்கிறார் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

நித்தியமானது எது? அதாவது அழியாதது எது? அநித்தியமானது எது? அதாவது அழி யக் கூடியது எது? என்பதைப் பாகுபடுத்தி உணர்வது விவேகம். அப்படிப்பட்ட ஆன் றோர் கூறும் விவேகம் அதிவிர ராமருக்கு வந்து வாய்த்தது.

'இந்த வேறுபாடு தெரிந்த பிறகும் சிற்றின்ப நாட்டம் கொண்டு ஈனத் துயர்க் கடலில் விழுந்து அழுந்தி வருந்துகிறேன்' என்கிறார்.

அநித்தியமானவைகளிடத்து அதாவது அழி யக்கூடியவைகளிடத்தில் பற்று இல்லாமல் இருப்பது வைராக்கியம். இந்திரியங்களால் பெறக்கூடிய உலக இன்பம் உண்மை யான இன்பம் ஆகாது என்னும் உணர்வு அவருக்கு ஏற்பட்டது; அனுபவத்திலே வந்து சேர்ந்தது. எனவே, "அனுதினமும் ஈனத் துயர்க் கடலில் அழுந்தினேன்" என்கிறார்.

உலக மாயா வாழ்வில் ஈடுபட்ட அவருக்கு, உலக வாழ்வின் மாயத் தோற்றம் தென்படு கிறது. விவேகம் வந்து வாய்க்கிறது. மாயத் தோற்றத்தை விடுத்து, உண்மையான இறைத் தோற்றத்தைக் காண அவாக்கொண்டு அலைந் தார். எண்ணமெல்லாம் இறை உணர்வு உடையவராய், சிவ சிந்தனை கொண்டவராய், தம்முடைய வந்தனை, வழிபாடு, வாக்கு ஆகிய அனைத்தையும் பிறைசூடிய பெருமானுக்குச் சமர்ப்பணம் செய்கிறார்.

மாதர் விழிவலையில் அகப்பட்ட அவர் அம் மாயா வலையிலிருந்து விடுபட்டுப் பக்தி வலைப் படுகிறார்.

"ஆத்ம சாதனத்துக்குப் பக்தி இன்றியமை யாதது; பக்தியின் மூலம் விவேகமும் வைராக் கியமும் இயல்பாக வந்து அமைகின்றன" என் பது ஸ்ரீ ராமகிருஷ்ணர் அமுத வாக்கு.

பிரபஞ்ச வாழ்வு பற்றிய சிந்தனை அதிவீர ராமருக்கு ஏற்படுகிறது. பிரபஞ்ச வாழ்வு பற்றிய அனுபவங்களை அவர் உணர்கிறார்.

"இந்தப் பிரபஞ்சத்தைச் சரியாக ஆராய்ந்து பார்த்தால் கடவுள் இருக்கிறார் என்பது தெளி வுற விளங்கும். பின்பு, கடவுள் இருக்கிறார் என்று யூகிப்பது வேறு; அவரைக் காண்பது வேறு. இனி அவரோடு ஒட்டி உறவாடுவது இவை யாவிலும் வேறு" என்பது இராம கிருஷ்ணரின் உபதேசம்.

பிரபஞ்சத்தைச் சரியாக ஆராய்ந்து பார்த்த அதிவீரராமர், இறைவனோடு ஒட்டி உறவாடக் காலம் பார்த்து ஏங்கிக்கொண்டிருந்தார். அந் தக் காலமும் அவருக்குக் கனிந்து வந்தது. களா மர நிழலில் குருமூர்த்தியாய்ப் பிறை மௌலிப் பெருமான் எழுந்தருளி அவருக்கு அனுக்கிரஹம் செய்தார்.

"தாயின் கர்ப்பத்தில் நான் யோக நித்திரை யில் இருந்தேன்; மண்ணுலகுக்கு வந்ததும் மண்ணைத் தின்னும் நிலை எனக்கு ஏற்பட்டது! நாபிக்கொடி என்னும் பாசக்கயிற்றை மருத்து வச்சி அறுத்துத் தள்ளினாள். ஆனால் இனி, மாயை என்னும் கயிற்றை அறுப்பவர் யார்?" என்னும் அருள்மொழி அமுத வாக்கு இங்கே நினைவு கூரத்தக்கது.

இந்த எண்ணத்தில் உறுதிப்பாடு உடைய வராய், மண்ணுலகத்தில் பிறவியாகிய மாசு நீங்கிய எம்பெருமானை வேண்டிப் பணிந்தார் அதிவீரராமர்.

"என்னையும் ஒருபொருளா அடிமைகொண்ட ஞானத்து உருவே"— ஒன்றுக்கும் பற்ருத நாயேன் லௌகிக வாழ்வையே பிரதானமாக மதித்து வாழ்ந்ததன் காரணமாக, அந்தத் துயரமாகிய கடலில் விழுந்து அழுந்துகின்றேன். அவ்வாறு அழுந்தித் துயரப்படுகின்ற என்னை, ஒரு பொருட்டாகக் கருதினுய். அவ்வாறு கருதி, இறைவா! உனது கருணைத் திருநோக்கால், கடைக்கண் அருள் பார்வையால் அடிமையாக ஏற்றுக்கொண்டாய். பெருமானே! நீ இவ்வண்ணம் செய்தருளியதற்கு அடியேன் எவ்வளவு புண்ணியம் செய்துள்ளேன் !"

சிவபெருமானின் பாதாரவிந்தங்களைச் சரணகதியாக அடைந்து விடுகிருர் அதிவீரராம பாண்டியர். அவரைக் கடைத்தேற்ற வேண்டும் என்னும் கருணைப் பெருநோக்குடன் எம்பெருமான் அவரை ஆட்கொள்கிருன்.

உண்மையான அன்போடு பக்தி பூர்வமாக, திட்பமான மன உறுதியுடன், நம்பிக்கையோடு யார் இறைவனைச் சரணுகதியாக அடைகிருர்களோ அவர்கள் அனைவருக்கும் ஈசன் அருள் பாலித்து வருகின்ருன்.

"நம்மையும் ஓர் பொருளாக்கி நாய்ச் சிவிகை ஏற்றுவித்த அம்மை எனக்கு அருளிய வாறு யார் பெறுவார் அச்சோவே!" என்பது இறைவனின் திருவருள்பெருக்குப் பெற்றுய்ந்த அடியார் ஒருவரின் அனுபவ மொழியாகும்.

"ஞானத்து உருவே! தமிழ்க்கருவை நம்பா!" —ஞான வடிவானவனே! தமிழ் வழங்கும் திருக்கருவையம் பதியில் எழுந்தருளியுள்ள எம்மானே!

ஞானமே வடிவாகி நின்று கருவை எம்மான் அதிவீரராமபாண்டியரை ஆட்கொண்டான்.

ஞானத்தைப் பொதுவாக மூன்று வகையாகப் பாகுபாடு செய்து ஆன்ருேர்கள் கூறுவார்கள். அவை யாவை? பாசஞானம், பசுஞானம், பதி ஞானம் என்பவை அவை.

பாச ஞானம் என்ருல் என்ன? வேதங்கள், சாஸ்திர நூல்கள், புராணங்கள்,இதிகாசங்கள் இவற்றில் ஆசை கொண்டு, ஆன்மாவாகிய உயிர், இன்ப துன்பங்களை அனுபவிப்பது பாச ஞானம்.

பசு ஞானம் என்பது யாது? ஆத்மா தானே அறியக்கூடிய ஆற்றல் இல்லாமல், ஐம்பொறிகளைத் துணையாகக்கொண்டு, பிறர் உணர்த்த உணரும் அறிவுடன் இருப்பது பசு ஞானம் என்பார்கள்.

பதிஞானம் என்ருல் என்ன? மற்றவர் யாரும் அறிவிக்க வேண்டிய அவசியம் இல்லாமல், ஆத்மா தானே எல்லாவற்றையும் அறியக் கூடிய அறிவுடன் விளங்குவது பதி ஞானம்.

பதிஞானம் என்ருலும் திருவடி ஞானம் என்ருலும் ஒன்றுதான்.

இறைவன், தான் யார் என்பதையும், ஆத்மா யார் என்பதையும் திருவடி ஞானமாகிய பதி ஞானம் வாய்க்கப்பெற்ற ஆத்மாவுக்குக் காட்டி அருள்கிருன் என்று சொல்வார்கள்.

உலக ஆசையை, உலகப் பற்றுதலை விட்டவிடத்துப் பதிஞானம் கைகூடும் என்பார்கள். பாச ஞானத்தாலும், பசு ஞானத்தாலும் அறிந்துணர முடியாத சிவபெருமானைப் பதி ஞானத்தாலே, உணர்தல் வேண்டும்; உணரலாம்.

அதிவீரராம பாண்டியர் அரச பதவியைத் துறந்ததன் மூலம் மண்ணாசையை விட்டுவிட்டார். பெண்பாலர் வசப்பட்டுத் துன்பப்பட்டதாக அவர் வருந்துவதன் மூலம் பெண்ணாசையையும் விட்டொழித்தவர்.

குருவுக்கும், குரு வடிவத்துக்கும், குரு பீடத்துக்கும் அதிகௌரவமான இடம் நமது மனதில் அளிக்கவேண்டும். குருவின் உபதேசத்தால் யாவற்றையும் உணரவேண்டும். அப்படி உணர்ந்து சிவபெருமானுடைய திருவடிகளைப் பற்றுக் கோடாகக் கொண்டு அடைக்கலமாக அடையவேண்டும். தேவலோக இன்பம், மண்ணுலக இன்பம் முதலான எல்லாப் போகங்களையும் வெறுத்து ஒதுக்கவேண்டும். கண்ணால் காண்பன யாவும் பொய் என உணரவேண்டும்.

இத்தகைய அனுபவ ஞானம் உடையவரின் உள்ளத்திலே ஆதியும், நடுவும், அந்தமும் இல்லாத, குணங்குறி கடந்த இறைவன்ஜோதி வடிவமாக வீற்றிருந்து காட்சி கொடுப்பான்.

"பொதுவில் நடித்தோனே!"— சித் சபையில் ஆனந்தத் தாண்டவம் புரிகின்றவனே? என அதிவீரராமர் சொல்லுகிறபோது,

தம் உள்ளமாகிய சபையில் ஜோதி வடிவமாக எழுந்தருளியுள்ள சிவபிரானைக் குறிப்பிடுகின்ருர்.

எவ்வுயிரும் தம் உயிர்போல் எண்ணி உள்ளே ஒத்து உரிமை உடையவராய் உவக்கின்றார் யாவர் அவர் உளந்தான் சுத்த சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும் இடம் என நான் தேர்ந்தேன்''—ஆக, அடியார்களின் உள்ளம், சிவன் ஆனந்தத் தாண்டவம் புரிகின்ற இடம் என்பது விளங்குகிறதன்றோ!

"நடித்தேன் பொய்க்கூடு எடுத்து, அவமே
நன்னாள் கழிய; இந்நாவில்
படித்தேன் உனது திருநாமம்;
பண்டை வினையின் பற்றுஅறுத்தேன்;
பிடித்தேன் பிறவிக் கடல்நீந்தப்
பெரிய புணையா உனதுஅடியை;
முடித்தேன் உள்ளத்து எண்ணம் எல்லாம்
கருவை வாழும் முன்னோனே!"

திருக்கருவையம்பதியில், முன்னைப் பழம் பொருளுக்கும் முன்னைப் பழம்பொருளாக விளங்கும் முழுமுதல் பரம்பொருளே!

இந்தப் பொய்யான சரீரத்தை எடுத்து, நல்ல நாட்கள் யாவும் வீணே கழியுமாறு, பொய் வாழ்வு வாழ்ந்து நடித்தேன். அதனை உணர்ந்து இப்போது, உனது திருநாமத்தை ஓதினேன்; அதனால் எனது பழைய வினைகளை எல்லாம் ஒழித்துவிட்டேன். பிறவிக் கடலை நீந்திக் கடப்பதற்கு, உனது பாதங்களைத் தெப்பமாகப் பற்றிப் பிடித்துக்கொண்டேன். இவ்வாறு எனது உள்ளத்தில் கருதியவற்றை முடித்துக்கொண்டேன்; இனிமேல் எனக்கு என்ன குறை? ஒரு குறையும் இல்லை.

"பொய்க்கூடு எடுத்து, நன்னாள் அவமே கழிய நடித்தேன்."

"அழியக்கூடிய இந்தப் பொய்யான சரீரத்தைப் பெற்றேன். இந்தக் கூடாகிய சரீரம் அழியக்கூடிய ஸ்தூல சரீரம் ஆகும். சரீரம் படைத்துத் தோற்றத்துக்கு வருகின்ற எல்லா உயிரினங்களின் சரீரங்களும் அழியக்கூடியவையே! 'இந்தச் சரீரத்தைப் பெற்றுவிட்டோமே? உலகத்தில் இந்தச் சரீரத்தால் நல்ல காரியங்கள் பல செய்யவேண்டுமே? ஆனால், நம்முடைய இந்தச் சரீரத்தால் செய்ய இயலாதே?' என்று விலங்குகளோ, பறவைகளோ வருத்தப்படுவது இல்லை. ஏனென்றால், வருத்தப்படுவதற்கு உரிய தகுதி அவற்றிடம் அமையவில்லை.

"மனிதன் ஒருவனே வருத்தப்படும் தகுதி படைத்தவன். இறைவனிடத்தில் ஈடுபாடும் பக்தியும் கொண்டு வாழ்கின்ற இறைநெறி வாழ்க்கை, அன்பர்களுக்கும் உயிர்களுக்கும் பணி செய்கிற தொண்டு வாழ்க்கை ஆகிய அறத்தோடு சார்ந்த வாழ்க்கை வாழ்வதற்கு மனித உடம்பு தரப்பட்டுள்ளது.

"இந்த நற்செயல்களையும் செய்யாமல், இவற்றிற்கு மாறான, உண்மைக்குப் புறம்பான பொய்யான வாழ்க்கை வாழ்ந்தேன்; உண்மையில் நான் வாழவில்லை; வாழ்வதுபோல நடித்தேன். மானுட வாழ்வு இறை உணர்விலும், மானிடர்க்கு அரும்பணி ஆற்றுவதிலும் கழிய வேண்டும். என் வாழ்வு அப்படி இல்லை. என் வாழ்நாள் முழுவதும் நல்ல நாட்களாகக் கழிய வேண்டியதிருக்க அப்படி இல்லாமல், வீணை நாட்களாகக் கழிந்துவிட்டனவே" என்று வருந்துகிறார் அதிவீரராமபாண்டியர்.

"நாடகத்தால் உன் அடியார்போல் நடித்து" என்கிறார் மணிவாசகர். நாடக நடிகரைப் போல, உன் அடியார் மாதிரி நடித்தேன் என்கிறார் அவர்.

அது போன்று, பொய்ச் சரீரம் எடுத்து, மெய்யான வாழ்வை விட்டு, பொய்வாழ்வு வாழ்ந்து, என் வாழ்நாள் நன்முறையில் கழிவதைப் போல, வீணாக்கிக் கழித்து நடித்துவிட்டேன் என்கிறார் அதிவீரராமபாண்டியர். உண்மையில் நம்மில் பெரும்பாலோர் இப்படித்தான் செய்து வருகிறோம். இப்படிச் செய்யக்கூடாது என்று எச்சரிக்கை விடுவதுபோல அவர் கூறுகிறார்.

வாழ்நாளை வீண் நாள் ஆக்கிவிட்ட விபரீதம் அதிவீரராமபாண்டியர் உள்ளத்தைப் பெரிதும் வதைக்கிறது. இந்த வதைப்பிலிருந்து அவருடைய உள்ளத்தை மீட்பது எது? இறைவனுடைய திருநாமம். வீணாகக் கழிந்த நாட்கள் போக, இனிமேல் வருகின்ற நாட்களை நல்ல நாட்களாக ஆக்க முனைகிறார். அதற்கு உதவுவது எது? எம்பிரானின் திருநாமம். இறைவன் திருநாமத்திற்கு அத்தகைய மகிமை உண்டு. ஆதிமூலமே! என்று அபயக் குரல் கொடுத்து அழைத்ததற்குக் கருணையுடன் இரங்கி முதலையைக் கொன்று கஜேந்திரனைக் காத்தவன் நாராயணன்.

# பெண்களுக்குச் சந்நியாசம் அவசியமா?

(ஸாரதா ஸமிதி)

"எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவி தான் யாதினும் அரிது அரிது காண். இப் பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ? ஏது வருமோ? அறிகிலேன்" என்று தாயுமானவர் அருமையாக மானுடப் பிறவியின் சிறப்பைப் பகர்ந்தருளியுள்ளார். கிடைத்தற்கரிய மானுடப்பிறவி எடுத்திருப்பது இறைவனை அடைதற்பொருட்டேயாகும். இறைவனை அடைதல் என்னும் பெரிய இலட்சியத்தின்கண் தன்னை ஒப்படைத்தல் ஆண், பெண் ஆகிய இருபாலர்க்கும் பொது நியதி.

நம் முன்னோர்கள் வாழ்க்கையைப் பிரம்மச்சரிய ஆச்ரமம், கிருஹஸ்த ஆச்ரமம், வானப்ரஸ்த ஆச்ரமம், சந்நியாஸ ஆச்ரமம் என நான்கு ஆச்ரமங்களாக வகுத்து வைத்திருந்தனர். இந்திரிய நிக்ரகம் செய்தல் சந்நியாச ஆச்ரமத்தின் தலையாய பண்பு. ஐம்பொறிகளையும் நன்கு அடக்கி ஆளுதல் நிவிருத்தி மார்க்கம். ஐம்பொறிகளைப் பயன்படுத்துதல் பிரவிருத்திமார்க்கம். பொறி வழியே மனம் செல்லாது விவேக வைராக்கியத்தால் நன்கு அடக்கிப் பிரம்மச்சரிய ஆச்ரமத்தில் நன்கு நிலை பெற்றவர் தாம் சந்நியாச ஆச்ரமத்திற்குத் தகுதி உடையவராகிறார்.

சந்நியாசம் என்றால் பரம் பொருளிடத்துத் தம்மை முற்றிலும் அர்ப்பணித்தல் என்பது உடன்பாட்டுப் பொருள் (**Total Sublimation**). சம் + நியாசம் = பற்றுதலை முற்றும் துறத்தல் என்பது பொருள். இத்தகைய பெருநிலைக்குப் பெண்பாலர்மட்டும் தகுதியற்றவர்களா என்ன! சந்நியாசத்திற்குத் 'துறவு' என்பது மற்றொரு பொருள். "துறந்தார்க்குத் தூநெறியாய் நின்றான் தன்னை! துன்பம் துடைத்தாள வல்லான் தன்னை" என்று அப்பர் சுவாமிகள் அழகுபடக் கூறுகின்றார். துறந்தார்க்கு இறைவன் தான் 'தீனபந்து'. இத்தகைய தீனபந்துவாகிய இறைவனிடத்துத்தான் பற்றுவைக்க வேண்டுமெனத் திருவள்ளுவர்

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்று கூறுகிறார். இறைவனிடத்துப் பற்றுதல் வளர்வதற்கேற்ப உலகப்பற்று தானாகவே குறைகிறது. இறைவனை நோக்கி நாம் ஓர் அடி நடந்தால் அவர் நம்மை நோக்கிப் பத்து அடி வருவார் என்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்கின்றார். ஆகவே பெண்மையின் சிறப்பியல்பான அன்பினாலே பகவானை அன்புக் கட்டிற்கு உட்படுத்த அவர்களுக்கு இயலும். 'அன்பெனும் பிடியுள் அகப்படு மலையே' என்று இராமலிங்க அடிகளார் இறைவன் அன்பிற்கு எவ்விதம் வசப்படுகின்றார் என்பதை விளக்குகின்றார். ராதை தன்னை முற்றிலும் கிருஷ்ணனுக்கே அர்ப்பணித்தவள். கிருஷ்ணனிடத்து ராதை கொண்ட பிரேமை பக்தியின் காரணமாகத்தான் ராதா கிருஷ்ண தத்துவம் ஜீவப் பிரம்ம ஐக்கியத்திற்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. பெண் சமுகத்திற்கே ராதை முன் மாதிரியாக அன்றோ திகழ்கின்றாள்! பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரும் தம் சாதனைகாலத்தில் ராதை போன்று உடை உடுத்து அந்த மனப்பான்மையிலேயே சிறிது காலம் திளைத்திருந்தார்.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரும் அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரும் சிவசக்தி சொரூபமாக இருந்து நமக்கு நன்கு பாடம் புகட்டுகின்றனர். கிருஹஸ்த ஆச்ரமத்திற்கும் சந்நியாச ஆச்ரமத்திற்கும் அவர்கள் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றனர். அத்தகைய பரம புருஷருக்கே முதன்முதல் தாந்திரிக சாதனங்கள் அனைத்தையும் பயிற்றுவித்தவர் பைரவி பிராம்மணி என்ற சந்நியாசினியாவார். தன்னலமற்ற சேவை உலகிற்குத் தேவை என்பதற்கிணங்க துறவி வேந்தர் சுவாமி விவேகானந்தரின் ஆக்ஞையை நிறைவேற்றச் சகோதரி நிவேதிதை தம் தாய்நாட்டைத் துறந்து இந்திய பூமிக்கு எழுந்தருளினார். அவருக்குச் சுவாமிஜி நிவேதிதா என்ற நாமகரணம் சூட்டி சந்நியாச தீட்சை அருளினார். அயல் நாட்டுப் பெண்மணி ஒருவர் இந்தியப் பண்பிற்கேற்பத் தம்மை மாற்றி அமைத்துக்கொண்டு அயராது பணிபுரிதல் என்பது சாமானிய காரியமன்று. இவர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த

முதல் சந்நியாசினி ஆவார்.

சுவாமி விவேகானந்தர் கல்கத்தாவில் பேலூர் மடத்தை ஸ்தாபித்தபோது அதைப் போன்று கங்கையின் எதிர்க் கரையில் பெண் பாலர்க்கென்று ஒரு மடம் அமைய வேண்டு மெனச் சங்கல்பித்தார். அச்சங்கல்பத்தின் வாயிலாக இன்று தக்ஷிணேசுவரத்தில் சாரதா மடம் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது. இன்று பல பெண்மணிகள் தூய அன்னையின் திரு நிழலில் சந்நியாச ஆச்ரமத்தையும் பிரம்மச்சரிய ஆச்ர மத்தையும் ஏற்றுக்கொண்டவர்களாகப் பணி புரிந்து வருகின்றனர். இன்று இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலும் இதன் கிளை ஸ்தாப னங்கள் தொடங்கப்பட்டு அம்மாது சிரோன் மணிகள் அரிய பெரிய காரியங்களை இயற்றி வருகின்றனர். மக்களுக்குச் செய்யும் சேவை மகேசுவரனுக்குச் செய்யும் சேவையன்றோ! பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், மருத்துவ மனைகள் முதலியவற்றில் அவர்கள் நிர்வா கத்தை ஏற்று நடத்துகின்றனர். 'ஆத்மனோ மோக்ஷார்த்தம் ஜகத் ஹிதாய ச' என்பதற் கேற்ப உலக நன்மையின் பொருட்டுத் தம்மை இறைத்தொண்டுக்குத் தியாகம் செய்தவர் களாக அவர்கள் திகழ்கின்றனர். இதற்குத் தியாக மனப்பான்மை அவசியம். அதற்குப் பற்றுதலைத் துறக்க முதலில் நாம் தயாராக வேண்டும்.

न कर्मणा, न प्रजया, धनेन त्यागेनैके अमृतत्वमानशुः ।

ந கர்மணு ந ப்ரஜயா, தனேன த்யாகேனைகே
அம்ருதத்வமானஶு:

என்பது உபநிஷத் வாக்கியம். கர்மத்தி னுலோ, மக்களைப் பெற்றெடுப்பதனுலோ, செல்வத்தைச் சேகரிப்பதனுலோ அழியாத அமிர்தத்துவ நிலையை அடைய முடியாது. தியாகத்தினுல் மட்டும்தான் அமிர்தத்து வத்தை நாம் அடைய முடியும். அமிர்தத் துவம் அடைவதற்குப் பெண்பாலர் தகுதியற்ற வர்கள் என்பதில்லை. தன்னுடைய குழந்தை களுக்குச் சுயநலத்தைக் கருதாது சிராட்டி வளர்ப்பதில் தாய் தலைசிறந்தவள். ஆகவே தியாகத்திற்குப் பெண்கள் தகுதியுடையவர் கள் என்பது சொல்லாமலே விளங்கும். சுயநலப்பற்றை ஒழித்தால்தான் பரநல சேவை செய்யமுடியும். பற்றற்ற நிலையில் கர்மம் செய்யும்போது கர்மபலன்கள் அழிக்கப்படு கின்றன. மனம் சுத்தமடைகிறது. பயன் கருதாது பற்றற்று நாம் கர்மம் செய்யும்போது அது கர்மயோகமாகிறது.

एतान्यपि तु कर्माणि सङ्गं त्यक्त्वा फलानि च ।
कर्तव्यानीति मे पार्थ निश्चितं मतमुत्तमम् ॥

ஏதான்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா பலானி ச
கர்தவ்யானீதி மே பார்த்த நிச்சிதம் மதமுத்தமம்

என்பது பகவான் கூறிய கீதா வாக்கியம்.

காம காஞ்சனத் தியாகம் இருந்தால்தான் நாம் பற்றற்றுக் கர்மம் செய்ய முடியும். பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர், அன் புக் களஞ்சியமாகத் திகழ்கின்ற அன்னை ஸ்ரீ சாரதா தேவியார், துறவி வேந்தர் சுவாமி விவேகானந்தர் ஆகிய மூவரும் நமக்குத் தியா கத்திற்கு முன் மாதிரியாகத் திகழ்கின்றனர்.

தியாகராஜனுகிய சிவனுர் தம்மில் தாம் திளைத்தவராகக் கோர தபசு செய்து கொண் டிருக்கிறுர். 'கோயில் சுடுகாடு, கொல்புலித் தோல் நல் ஆடை, தாயுமிலி, தந்தையிலி தான் தனியன் காணேடி.' என்று மணிவாசகப் பெருந்தகை பாடியுள்ளார். சிவனுர் பற்றற்ற நிலையில் தவம் புரிந்து கொண்டிருப்பது உலக மக்களுக்கு உண்மையை உணர்த்துதல் பொருட்டேயாகும். தென்முனையில் குமரித் தாய் சிவ சைதன்யத்தை அடைதற்பொருட் டுத் தவம் புரிந்து கொண்டிருக்கின்றுள். மக்கள் எவ்விதம் தவத்தை மேற்கொள்ள வேண்டுமென்பதைச் சிவனுரும், குமரித்தாயும் காட்டி அருளும் போது இதைவிடச் சான்று வேறு என்ன நமக்கு வேண்டும்? ஆண்டாள் 'உற்ேறமேயாவோம் உனக்கே நாம் ஆட்செய் வோம் மற்றை நம் காமங்கள் மாற்று' என்று பிரார்த்திக்கிறுள். 'உனக்கே நாம் ஆட்செய் வோம்' என்பது பூரண சரணுகதி தத்துவம். தன்னை முற்றிலும் இறைவனுக்கே அர்ப்பணித் தல் என்ற கருத்திற்கு ஏற்ப ஆண்டாள் பகர்கின்றுள். ஔவையார் என்னும் தமிழ் மூதாட்டி நீதி நூல்கள், தர்ம நூல்கள், துதிப் பாடல்களிலேயே யோகம், பக்தி, ஞானம் எல்லாவற்றையும் வைத்து முடிந்த நிலைகளைப் பாடல்களில் பாடியவர். காரைக்கால் அம்மை யார் சிவ பக்தியினுலே குடும்பத்தைத் துறந்ததோடு அல்லாமல் சரீர போதத்தையே

துறந்து பேயுருவம் கொண்ட பெண் துறவி யாவார்.

सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहं त्वा सर्वपापेभ्यः मोक्षयिष्यामि मा शुचः ॥

**ஸர்வதர்மான்பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ**
**அஹம் த்வா ஸர்வபாபேப்ய:மோக்ஷயிஷ்யாமி மா சுச:**

'தர்மங்களையெல்லாம் அறவே தியஜித்து விட்டு என்னையே சரணடைக. பாபங்கள் அனைத்தினின்றும் உன்னை நான் விடுவிப்பேன்' என்று கிருஷ்ண பகவான் பகவத் கீதையில் அர்ஜுனனுக்குக் கூறுவதன் வாயிலாக உலக மக்கள் அனைவருக்கும் உறுதி அளிக்கின்றார். சரணடைந்தோர் துயர் தீர்க்கும் அருள்மாதாவாக அன்னை ஸ்ரீ சாரதா தேவியார் திகழ்கின்றார். எத்தனையோ பேர் அன்னையைச் சரணடைந்து அருளுக்குப் பாத்திரராகின்றனர். அவர்களுள் யோகின்மா, கொலாப்மா, கௌரிமா போன்றோர் குறிப்பிடத் தக்கவர்கள். அன்னையிடத்துப் பெரும் பக்தி பூண்டு தம்மை அர்ப்பணித்தவர்கள் எத்தனையோபேர். 'பக்தி வலையில் படுவோன் காண்க' என்பதற்கேற்பப் பகவான் பக்தனுக்குக் கடன்பட்டவராகின்றார். ராமபிரானிடத்துக் கொண்ட பக்தியின் காரணமாக எத்தனை ஆண்டுக் காலம் சபரி பொறுமையோடு ராமபிரான் வருகைக்குக் காத்திருந்தாள்! அவள் சுவை பார்த்துப் பேரன்புடன் அளித்த கனிகள் தாம் ராமபிரானுக்கு ஏற்புடையதாயின. 'பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி, ததஹம் பக்த்யுபஹ்ருத மச்னுமி ப்ரயதாத்மன:' என்னும்கீதா சுலோகத்திற்குச் சபரியின் வாழ்க்கை ஓர் எடுத்துக் காட்டு. 'பகவான், பக்தன், பாகவதம் ஆகிய மூன்றும் ஒன்றே' என்ற திருக்காட்சியைப் பகவான் ராமகிருஷ்ணர் கண்டார். வேத காலப் பெண்மணிகளான கார்க்கி, மைத்ரேயி போன்றவர்கள் ஞான மணிகளாகத் திகழ்ந்தனர். கோபியர்கள்கிருஷ்ணனிடத்துக்கொண்ட அளப்பரிய பக்திக்கு இறைவன் ஆட்பட்டார். தம்மை முற்றிலும் இறைவனுக்கு அர்ப்பணித்தவர்களுக்குத் தாம் இறைவன் சொந்தமாகிறார்.

ஐம்புலன்களை நன்கு அடக்கி, பிரம்மச்சரிய ஆச்ரமத்தில் நிலைத்திருந்து விவேக வைராக்கியத்தால் பற்றற்ற நிலையில் காரியங்கள் புரியும் போது மனம் பரிசுத்தமடைகிறது. பரிசுத்தமடைந்த மனது இறைவனைப்பற்றிய தத்துவங்களைக் கிரகிக்க வல்லதாகிறது. 'சுத்த மனதும் சுத்த சைதன்யமும் ஒன்றே' என்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்தருள்கின்றார்.

असक्तबुद्धिः सर्वत्र जितात्मा विगतस्पृहः ।
नैष्कर्म्यसिद्धिं परमां संन्यासेनाधिगच्छति ॥

**அஸக்தபுத்தி: ஸர்வத்ர ஜிதாத்மா விகதஸ்ப்ருஹ:**
**நைஷ்கர்ம்யஸித்திம் பரமாம் ஸன்யாஸேனாதிகச்சதி**

"யாண்டும் பற்றற்ற புத்தியுடையவனாய், சிந்தையை அடக்கியவனாய், ஆசையற்றவனாய் இருப்பவன் சந்யாசத்தால் உத்தமமான நைஷ்கர்ம்ய சித்தியை அடைகிறான்" என்று பகவான் கீதையில் பகர்கின்றார். ஆகவே யாண்டும் இறைவனை அடைதல் என்னும் பெரிய லட்சியத்தின்கண் உறுதியான நம்பிக்கையோடு செல்வோமேயாகில் அவன் அருளால் அவனை அடைதல் நிச்சயம். தகுதி உடையவர்கள் அடையலாம் என்பதில் ஆண், பெண் ஆகிய இருபாலரும் துறவிற்கும், பக்திக்கும், முக்திக்கும் தகுதி உடையவர்கள் ஆகலாம். ஜீவ போதம் ஒழிந்து பரபோதம் மேலோங்கும் போது ஜீவ பிரம்ம ஐக்கியம் நிகழ்கிறது. இங்குப் பால்வேற்றுமை இல்லை. என்றும் இதுவே முடிந்த முடிவு. ஆண், பெண் என்னும் பால் வேற்றுமையைக் கடந்து அனைவரும் பர சொரூபம் என்று உணர்வதே சந்நியாசம். இந்நிலையை அடைய விரும்பும் அனைவருக்கும் சந்நியாசம் அவசியம். இத்தகைய பேரானந்தப் பெருநிலையை அடைய அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரின் திருவருளால் எண்ணிக்கையில் அடங்கா மாதர் மணிகள் அவ்வன்னையின் திருப்பணியை ஏற்றுத் தொண்டுபுரிய முன்வர வேண்டும். அன்னையின் அருள் அனைவருக்கும் சொந்தமாகவேண்டும். அவ்வன்னையே நம்மை வழிநடத்திச் செல்லும்போது நாம் கவலையின்றி ஆனந்தமாக முன்னேக்கிச்செல்லலாம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அன்னை சாரதா தேவியாரைப் பூஜைசெய்து அவரிடம் தம் தபோபலன்களை ஒப்படைத்தார். அகிலாண்டநாயகியாகிய அன்னை ஸ்ரீ சாரதா தேவியார் அருள் செல்விகளாகிய நமக்கு அருள்பாலிக்கத் தயாராக இருக்கிறார். அவ்வருளுக்கு நம்மை உரியவர்களாக்கிக் கொள்வோமாக.

---

# விவேகானந்தரின் சிந்தனைகள்

[ திருச்சி வானொலி நிலையத்தில் 12—1—83 அன்று ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் நிகழ்த்திய உரை ]

தனி மனிதனிடத்தில் நலம் கேடுகள் கலந்திருப்பன போன்று சமுதாயத்தில் நலன் கேடுகள் கலந்திருக்கின்றன. ஒரு மனிதன் வலிவு படைத்த வாழ்வு வாழ்ந்து வரும்போது அவனுக்கு நோய்கள் அதிகம் உண்டாவதில்லை. ஆனால் மெலிந்துபோய்விடுவானாகில் நோய்கள் தோன்ற ஆரம்பித்துவிடுகின்றன. இக்கோட்பாடு ஒரு சமூகத்துக்கும் பொருந்தும். உறுதிப்பாடுடன் கூடிய சமூக வாழ்வில் நலன்கள் யாவும் மிளிர்கின்றன. சமூக வாழ்வு சீர்குலையுங்கால் கேடுகள் பல தோன்ற ஆரம்பித்துவிடுகின்றன. சமுதாயத்தில் உள்ள கேடுகளைக் களைந்து நலன்களை வளர்ப்பதே சமுதாயச் சீர்திருத்தமாகும். நோயுள்ள ஒருவன் பிறருடைய நோயைப் போக்கமுடியாது. ஆரோக்கியமான மனிதன்தான் பிறருடைய நோயைப் போக்கமுடியும். அங்ஙனம் சீர்கேடுடைய நாம் சமுதாயத்திலுள்ள சீர்கேட்டைப் போக்க முடியாது. சமுதாயத்தில் நலனை வளர்ப்பதற்கு நம்மை முதலில் சரி செய்து கொள்ளவேண்டும். சீர்திருத்தவாதிகள் என்று சொல்லிக்கொண்டு சமுதாயத்தில் மேலும் சீர்கேட்டை நாம் உண்டுபண்ணிக் கொண்டிருக்கக்கூடாது. முதலில் இன்றைக்கு நம்மிடத்தில் சுயநலம் என்னும் சீர்கேடு புகுந்துள்ளது. சாலைகள் போடுவதாகவும், அணைகள் கட்டுவதாகவும், பள்ளிக்கூடங்கள் கட்டுவதாகவும், ஆஸ்பத்திரிகள் கட்டுவதாகவும் சொல்லிக்கொண்டு செயல்படுகின்றவர்கள் என்ன செய்கிறார்கள் தெரியுமா? பொதுப் பணிக்காக ஒதுக்கப்பட்ட பணத்தில் பாதிக்கு மேல் தங்கள் சொந்தத்தேவைக்குப் பயன்படுத்திக்கொள்கிறார்கள். பாதியைக்கொண்டு காரியத்தை அரைகுறையாகச் செய்து முடிக்கிறார்கள். பொதுக்காரியங்கள் செய்கின்ற வேலையாட்களும் பொறுப்பற்றவர்களாக நடந்து கொள்கிறார்கள். எனவே பொதுக் காரியங்கள் ஒழுங்காக நடப்பதில்லை. முதலில் சீர்திருத்தக்காரர்கள் சமுதாயத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். பிறகு தங்களைச் சமுதாயத்துக்கென்று ஒப்படைக்கவேண்டும். சீர்திருத்தக்காரர்கள் எப்படி இருக்கவேண்டுமென்பதைப் பற்றிச் சுவாமி விவேகானந்தர் கூறுவதாவது: "நாட்டு மக்களின் நிலையை எண்ணி எண்ணி உங்கள் இதயம் உருகுகின்றதா? உங்கள் உடம்பில் ஓடும் ரத்தத்தின் துடிப்பு நாட்டு மக்களைப் பற்றியதாக இருக்கின்றதா? நாட்டு மக்களின் நிலையை எண்ணி எண்ணி உங்களுக்கு உறக்கம் ஒழிந்து போய் விட்டதா? அந்த எண்ணத்தில் உங்கள் உள்ளம் மூழ்கி உணவை மறந்து விட்டதா? இத்தகைய நிலை உங்களிடத்தில் உருவாகும்பொழுதுதான் நீங்கள் நாட்டுக்காக ஏதாவது நலன் செய்ய முடியும். சீர்திருத்தக்காரர்களே, நாட்டுக்கு நலன் செய்வதற்கு முன்பு உங்களிடத்தில் இத்தகைய மனோபாவனையை வளருங்கள்."

இயற்கைத் திட்டத்தை நாம் அறிந்துகொள்ளுதல் வேண்டும். இயற்கையிலுள்ள ஒவ்வொன்றும் முன்னேறுவதற்கு இடம் உண்டு. உயிர்கள் தம் போக்கில் முன்னேறி வருகின்றன. முன்னேறி வருகின்ற உயிர்களுக்கு நாம் தடையாக இருக்கக்கூடாது. உயிர்கள் முன்னேறுவதற்குத் தடையாக இருப்பது எதுவோ அத்தடையை நீக்குவதற்கு நாம் உதவி செய்யவேண்டும். உலகுக்கு உதவி செய்வதைப்பற்றி விவேகானந்தர் கூறியுள்ள கருத்தை ஈண்டு ஞாபகத்துக்குக் கொண்டு வருவோம். "மானுடா, உன்னுடைய உதவியை வேண்டி உலகம் இருக்கவில்லை. உன்னுடைய உதவி இல்லாமலேயே உலகம் முன்னேறிவரும். ஆனால் நீ உலகுக்கு நலன் செய்யக் கடமைப்பட்டிருக்கின்றாய். உலகுக்கு நீ நலன் செய்வதன்மூலம் உனக்கு நீ நலன் செய்துகொள்பவனாகின்றாய். உலகுக்கு நலன் செய்வதன்மூலம் உன்னை நீ ஒழுங்குபடுத்திக் கொள்கின்றாய். உலகுக்கு உதவி செய்கின்ற வாய்ப்பு உனக்குக் கிடைக்குமானால் அவ் வாய்ப்புக் கொடுத்தவனுக்கு நீ நன்றி செலுத்த வேண்டும். கடவுள் அவன் வடிவத்தில் வந்து உலகுக்கு உதவிசெய்ய உனக்கு ஒரு வாய்ப்புக் கொடுத்துள்ளார் என்று எண்ணவேண்டும். அப்படி எண்ணாது 'நான் இத்தகைய

உதவி உலகுக்குச் செய்தேன்' என்று எண்ணுவது அறிவீனமாகும். நீ சில விஷயங்களை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். முதலாவதாக நீ உலகுக்குக் கடன்பட்டவனாய் இருக்கின்றாய். அக்கடனைத் தீர்ப்பதற்கு நீ உலகுக்கு வந்திருக்கின்றாய். உலகுக்கு உதவி செய்ய உனக்கு வாய்ப்புக் கிடைக்குமானால் நீ பாக்கியவானாகின்றாய். உலகுக்கு உதவி செய்வதன் மூலம் உனக்கு நீயே உதவி செய்துகொள்கின்றாய். இரண்டாவதாக இறைவன் இவ்வுலகாகத் தோற்றம் அளித்துக் கொண்டிருக்கிறார். எனவே உலகுக்கு உன்னுடைய உதவி தேவை இல்லை. இங்கு நிகழ்வனவெல்லாம் இறைவனுடைய திட்டங்களாகும். ஆகையால் உன்மூலம் உலகுக்கு நலன் ஏற்படுகிறது என்று நீ அகங்கரிக்கவேண்டாம். மூன்றாவதாக நீ யாரையும் வெறுக்க வேண்டாம். அன்புடன் எல்லாரிடமும் பழகி உலகுக்கு நலன் செய்து கொண்டே வருவாயானால் உன்னை நீ உறுதிப்படுத்திக் கொள்கின்றாய். நான்காவதாக உன்னிடத்தில் கொள்கை வெறி இருக்கக்கூடாது. கொள்கை வெறி உடையவன் நலன் செய்வதற்குப் பதிலாகத் தீமையே செய்வான். ஐந்தாவதாகப் பொறுமையும் அமைதியும் உடையவனாக நீ செயல்படவேண்டும். எவ்வளவுக்கெவ்வளவு அன்பினால் உந்தப்பட்டு பணி செய்கின்றாயோ அவ்வளவுக்கவ்வளவு நீ நற்செயல்கள் செய்து முடிப்பாய். நவீனப் போக்கில் பற்றுடைய சிலர் மேலை நாட்டு நாகரிகத்தைப் பின்பற்றினால்தான் நாம் முன்னேற முடியும் என்று நினைக்கிறார்கள். இந்தியப் பண்பை வளர்ப்பதனாலும், அதற்காக உழைப்பதனாலும் நாம் முன்னேற முடியும் என்று பழைய இந்தியா நமக்கு வழிகாட்டுகிறது. மேலை நாடுகளின் சமுதாய வாழ்க்கையை மேற்போக்காகப் பார்க்குமிடத்துக் கவர்ச்சிகரமாகத் தோன்றும். ஆனால் அச்சமுதாய வாழ்க்கை துன்பத்திலும், துயரத்திலும்தான் நம்மைக் கொண்டு சேர்க்கும். இந்திய வாழ்க்கை புறத்தோற்றத்தில் கவர்ச்சிகரமாக அமையாவிட்டாலும் முடிவில் துயரத்தைப் போக்கிப் பேரின்பத்தை நல்குகிறது. சீர்திருத்தக்காரர்களே, உபநிடதம் கூறும் ஒரு கருத்தை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். மக்கட்பேற்றாலோ, செல்வத்தாலோ, கர்மத்தாலோ ஒருவன் அழியாப் பெருநிலையை அடைய முடியாது. தியாகத்தால் மட்டுமே ஒருவன் அழியாப் பெரு நிலையை அடைய முடியும்.'' விவேகானந்தரின் இக்கருத்துக்களை எல்லாம் செயலுக்குக் கொண்டு வரும் பொழுது உண்மையான சீர்திருத்தம் நாட்டில் ஏற்பட்டு நாடு உன்னத நிலையை அடையும்.

## ஆலய வழிபாட்டிற்குச் செல்பவரின் மனப்பான்மை

மனம், மொழி, மெய் ஆகிய திரிகரண சுத்தியுடன் ஆலய வழிபாட்டுக்குப் போக வேண்டும் என்பது கோட்பாடு. ஆலயத்துக்குள் நுழையும்பொழுதே உலக வியவகாரங்களை ஒதுக்கி வைத்துவிட வேண்டும். கடவுளைப் பற்றிய சிந்தனையே சித்தமிசை குடிகொண்டிருப்பது அவசியமாகிறது. பதைபதைப்புக்கோ, வேகம் நிறைந்த நடமாட்டத்துக்கோ ஆங்கு இடமில்லை. அமைதியும் சாந்தமும் வடிவெடுத்தவனாக வழிபடுபவன் ஆய்விடுகிறான். கோயிலுக்குள் கூச்சலிட்டுப் பேசுகின்றவர்கள் வழிபடுபவர் ஆகார். கோயிலின் புனிதத்தையும் ஒருவிதத்தில் அவர்கள் பாழ்படுத்திவிடுகின்றனர். ஒருவரோடு ஒருவர் பேசாதிருந்து வழிபாடு செய்வதே சாலச் சிறந்தது. வழிபாட்டை முடித்தான பிறகு ஓர் இடத்தில் அமைதியாக அமர்ந்திருந்து தியானம் பண்ணுவது முற்றிலும் அவசியம். பல பெரியோர்கள் ஆழ்ந்து எண்ணிய உயர்ந்த எண்ணங்கள் நிறையப்பெற்ற இடம் ஆலயம். ஆங்கு வழிபடுபவன் அமைதியுற்று அமர்ந்திருப்பானாகில் அந்த உயர்ந்த எண்ணங்கள் அவனது மனத்தகத்துப் பிரதிபலிக்கும். அதுவே ஆலய வழிபாட்டினின்று வழிபடுபவன் பெறுகின்ற பெரிய பேறு ஆகும். இத்தகைய மனப்பான்மையுடன் எத்தனை பேர் ஆலயத்துக்குள் வந்து வணங்குகின்றார்களோ அதற்கேற்ப ஆலயத்தினுள் ஏற்கனவே அமைந்துள்ள அருள் பன்மடங்கு பெரியதாகின்றது. அருளைத் தானே அடைவதன்மூலம் ஆலயத்தின்கண் அன்பன் அருளைப் பெருக்குகின்றான். ஆலய வழிபாட்டின் ஒப்பற்ற பயன் இதுவேயாம்.

# அஞ்சாமை

(சுவாமி அசலானந்தர்)

அஞ்சாமை-अभयं, தெய்வ ஸம்பத்தில், முதல் ஸம்பத்தாகக் கீதையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எல்லா உயிர்களும் ஏதோ ஒரு போக்கில் அச்சத்திற்கு அடிமைப்பட்டிருக்கின்றன. அச்சம் அறியாமையின் காரணமாகப் பிறக்கிறது. தனக்கு அன்னியமாகப் பிறிதொன்று புறத்தே இருக்கிறது; அஃது ஏதேனும் ஒரு போக்கில் தனக்குக் கேடு விளைவிக்குமென்ற மனப் பிராந்தியே அச்சத்திற்கு மூலகாரணமாகும். இது மனதின் குறைபாடாகும். எதன் காரணமாக அச்சம் ஏற்படுகிறதோ அதைப்பற்றி நிதானமாகச் சிந்தித்துப் பார்த்தால், விளைந்த அச்சம் பொருளற்றது எனப் புலப்படும். எனினும் அச்சம் முற்றிலும் மனத்தகத்தினின்று நீங்குவதில்லை. அதற்குக் காரணம் அறியாமையும் பலவீனமும் ஆகும். தன்னை உடல் மயமாக, மனம், புத்தி மயமாகக் கொண்டு, கட்டுண்ட சூழ்நிலையில் தான் வாழ்வதாக உயிர் ஒவ்வொன்றும் எண்ணுகின்றது. ஆத்ம சொருபமாக, எல்லா உயிர்களுடனும் தம்மை ஒன்றித்துக்கொள்ளும் பேரன்பின் தன்மையை உயிர்கள்உணரும்போது அச்சத்திற்கு இடமில்லை. தம் நிழலைக்கண்டு அஞ்சுவார் எவருமுண்டோ? ஆக, பேத புத்தியே அச்சத்திற்கு முகாமையாகிறது. பேத புத்தியை அகற்றிவிட்டால் அச்சம் முற்றிலும் அகன்றுவிடும்.

அச்சத்தில் பல்வேறு படிகள் இருக்கின்றன. அவையாவன: சாதாரண மிரட்சி, மருட்சி, பீதி, கொடூரம், அதிபயங்கரம். அதி பயங்கரம் ஏற்படும்பொழுது உடல் முழுவதும் வியர்க்கிறது; தாமாக மலம், ஜலம் வெளியாகின்றன; மனம் மரக்கட்டைபோல் (स्तम्भ) ஆகிவிடுகிறது. சில சமயம் அதிர்ச்சி காரணமாக மரணம் ஸம்பவிக்கிறது. இனி, கொடூர அச்சத்திலோ முகம் வெளுத்துக் கண்கள் ஒரு விதமான, விசித்திரமான, கொடூரமான, உயிரற்ற பார்வையுடன் காணப்படுகின்றன. 'பீதி' என்பது மேடையில் பேச்சாளர், கூட்டத்தினரைக்கண்டு பேசமுடியாது கலங்குவது; மாணவர்கள் தேர்வின்போது, தன்னம்பிக்கை இழந்து தடுமாறுவது, நோயுறுவது — இவை போன்றனவாம். இப்படி அச்சம் பல்வேறு படித்தரங்களில் வெளிப்படுகின்றது.

அச்சம் மனவலிவைக் குன்றச்செய்கிறது. தன் இயல்பான திறனையும் ஆற்றலையும் மறக்கும்படியாகச் செய்கிறது. அனைத்தையும் நாசம் செய்யவல்லது அச்சம். அச்சமில்லாது ஊக்கத்துடன் முயல்வோனுக்கே இவ்வுலகப் பெற்றியும் விண்ணுலகப் பெற்றியும் ஏன் முக்தியுங்கூடக் கிட்டுகிறது.

அர்ஜுனனுக்குத்தாற்காலிகமாகக் கோழைத்தனம், அச்சம் ஏற்பட்டபோது பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் பகர்ந்ததாவது:

कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम् ।
अनार्यजुष्टमस्वर्ग्यमकीर्तिकरमर्जुन ॥

குதஸ்த்வா கச்மலமிதம் விஷமே ஸமுபஸ்திதம்
அனார்யஜுஷ்டமஸ்வர்க்யம் அகீர்திகரமர்ஜுன

அர்ஜுனா, ஆரியனுக்கு அடாததும், ஸ்வர்க்கத்தைத் தடுப்பதும், புகழைப் போக்குவதுமான இவ்வுள்ளச் சோர்வு இந்நெருக்கடியில் எங்கிருந்து உன்னை வந்தடைந்தது?

— கீதை அத் II, சுலோ. 2.

அச்சம் பண்பில் மேல் நிலைக்கு வரமுயல்வோனுக்கு, வந்தவனுக்குப் பொருந்தியதன்று. எந்த நெருக்கடி தோன்றினும் எதிர்த்துத் தைரியத்துடன் சமாளிக்க வேண்டுமே தவிர அச்சமடையக்கூடாது. "नायमात्मा बलहीनेन लभ्यः — இந்தஆத்மா பலவீனனால் அடையப்படுவதன்று." தைரியம்படைத்திருப்பவனுக்கே பலம் ஏற்படுகிறது. தன்னைக்குறித்து முழு நம்பிக்கை வைக்கவேண்டும். "Impossible is not a word in my life—முடியாது என்பது என் வாழ்க்கையில் இல்லை" என்று முழங்கிய நெப்போலியனின் முன்னேற்றத்தைப் பார்த்தால், தைரியத்தின் — அச்சமின்மையின் — தன்னம்பிக்கையின் வலிவு புலனாகிறது. "இது என்னால் சாத்தியப்படாது" என எண்ணுவது அச்சத்தால்தான்.

ஆயினும், அஞ்சாமை என்பதற்கு 'வீண் கர்வம்கொண்டு திரிதல்' என்று பொருள் கொள்ளலாகாது. அடக்கம் தேவையாயிருக்

கும் சந்தர்ப்பங்களில் அடக்கத்துடனும் பணிவுடனும் இருப்பதே சாலச் சிறந்தது. தம்மிலும் பண்பில், அறிவில், வயதில் மிக்காரிடத்தில் அடங்கிச் செல்லவேண்டுமே அல்லாது, அன்னாரிடத்தில் முரண்டு கொள்ளலாகாது.

"எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து."

"பணிவுடையராக ஒழுகுதல் பொதுவாக எல்லார்க்கும் நல்லதாகும்; அவர்களுள் சிறப்பாகச் செல்வர்க்கே மற்றொரு செல்வம் போன்றதாகும்" என்பது குறள் நெறி. நம்மைக் கீழ்மையில் ஆழ்த்த முயல்கிற புறப்பொருள்களை, இயல்புகளை அஞ்சாது எதிர்த்து வெற்றி கொள்ளவேண்டும்; அவைகளை அடக்கி நம் கட்டுப்பாட்டில் இருக்கும்படியாகச் செய்ய வேண்டும். அவை நம்மை மீறிச் செல்ல எவ்வகையிலும் இடங்கொடுக்கலாகாது.

பீஷ்மர் பிரம்மச்சரிய விரதம் மேற்கொண்டிருந்தார். அவ்விரதத்தைக் கைவிட்டுவிடப் பரசுராமர் பீஷ்மரைத் தூண்டினார்; அம்பா என்ற காரிகையை மணந்துகொள்ள ஆணையிட்டார். பரசுராமர், பீஷ்மரின் குரு. வயதில் மூத்தவர், கடுமையான தவம் மேற்கொண்டு ஒழுகுபவர். இத்தன்மைத்தான பரசுராமரின் பெருமைகளையெல்லாம் நன்கு அறியப்பெற்றவராகப் பீஷ்மர் விளங்கியபோதிலும், விரதங்களில் சீரிய விரதமான, தாம் உறுதியாக, வலிந்து மேற்கொண்ட பிரம்மச்சரியத்தைப் பரசுராமரின் பொருட்டு அவர் விடத்தயாராக இல்லை. அஞ்சாது பரசுராமரை எதிர்க்கத் துணிந்தார். மேற்கொண்ட உறுதிப்பாட்டிலிருந்து இம்மியளவும் யார் பொருட்டும் வழுவாத அஞ்சாத வீரர் பீஷ்மராவார். பரசுராமர் பீஷ்மரைப் பெரிதும் பாராட்டினார். பரசுராமரும் தாம் அம்பாவிற்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற அஞ்சாது பீஷ்மரை எதிர்க்கவும் செய்தார். தர்மம் பீஷ்மர் பக்கம் இருந்ததால் பரசுராமர் தோற்றார். அத்தோல்வியை மனப்பூர்வமாகப் பரசுராமர் ஏற்றுக்கொண்டார். அது அவருடைய சீலத்தைக் காட்டுகிறது. கடோபநிஷத்தில், நசிகேதஸ் வரலாற்றில் அஞ்சாமை பற்றி விளக்கங்கள் சில கிடைக்கின்றன. முதலில், தன் தந்தை யாகத்தைச் சரிவர இயற்றாமை பற்றித் தயங்காது, பணிவோடு, விவேகத்தோடு நசிகேதஸ் தன் கருத்தை வெளியிடுகிறான்.

स होवाच पितरं तत कस्मै मां दास्यसीति ।
ஸ ஹோவாச பிதரம் தத கஸ்மை மாம் தாஸ்யஸீதி

"அப்பா! என்னை யாருக்குத் தானம் செய்யப்போகிறீர்கள்?"— கட. I. 4.

நசிகேதஸ் தன் தந்தையின் செயலில் குறைபாடு காண்கிறான். குறைபாட்டை நீக்கத்தக்க உபாயத்தைக் கண்டு அஞ்சாது தியாக புத்தியுடன் தன்னையே அர்ப்பணம் செய்ய முயல்வது அவனது வீரத்தைக் காட்டுகிறது.

அடுத்து, யமன் மூன்றாவது வரத்தை நசிகேதஸுக்குத் தரும் விஷயத்தில் தயக்கம் காட்டி, மயக்கமடைய, மோகமடையச் செய்யும் போகங்களைத் தருவதாகக்கூறும் போது அஞ்சாது யமனிடம் நசிகேதஸ் வாதிடுவது பாராட்டுதற்குரியதாகும். யமனே இதைக் குறித்து நசிகேதஸைப் பாராட்டுகிறான். இந்நிகழ்ச்சிகளிலிருந்து புலனாகும் உண்மை யாதெனில் உயர் லக்ஷியத்தினின்று பிசகாது இருக்க முயல்வது, அஞ்சாது போராடுவது அங்கீகரிக்கப்பட்டதே என்பதாகும்.

மேலும் சத்தியவான்–சாவித்திரி வரலாற்றைப் பார்க்குமிடத்து, விதிவசத்தால் சத்தியவான் இளமையிலேயே மாண்டுவிடுகிறான். யமன் சத்தியவானின் உயிரைக் கவர்ந்து செல்வதைத் தன் கற்பின், தவத்தின் சக்தியினால் சாவித்திரி காண்கிறாள்; யமனைப் பின் தொடர்ந்து செல்கிறாள். யமன் சாவித்திரியைத் தன்னைத் தொடர்ந்து வரவொட்டாது தடுக்கிறான். எனினும் அஞ்சாது சாமர்த்தியமாகப் பேசித் தன் கணவனான சத்தியவானின் உயிரை யமனிடமிருந்து மீட்கிறாள். மனவுறுதி இருந்தால், முறையான முயற்சி செய்தால் ஆகாததை ஆகும்படி செய்யலாம். ஊழையும் உப்பக்கங் காணலாம் என்பதை இவ்வரலாறு நமக்கு எடுத்துப் புகட்டுகிறது.

பாரதப்போரில் எதிரிகளின் பத்மவியூகத்தை உடைத்து அபிமன்யு அதனுள் புகுந்தான். வியூகம் மறுபடியும் மூடப்பட்டதால் அவனுக்குப் பாதுகாப்பாக அவனைத் தொடர்ந்து வர இருந்த அதிரதர்கள் வியூகத்தின் உள்ளே புக முடியவில்லை. எனினும் அபிமன்யு அஞ்சாது

தன்னை எதிர்த்து நின்ற மஹாரதர்களோடு தன்னந்தனியனாகப் போரிட்டான். இறுதியில் உயிர் இழந்தான். ஆயினும் அவனுடைய மன வலிவையும் வீரத்தையும் அனைவரும் பாராட்டினர். அவனது மனவலிமை எல்லாரையும் திகைக்கச் செய்தது. அபிமன்யு வீரத்தின்நிலைக்களம்; அச்சத்தை இன்னதென்று அறியாத சூரன். போர்க்களத்தில் வீரன் ஒருவன் எப்படித் திகழவேண்டும் என்பதற்கோர் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தவன் அபிமன்யு. செயலில் இறங்குவோர் அனைவரும் அத்தகைய மனவுறுதியைப் பெற முயலவேண்டும். ஏதேனும் ஓர் இலக்ஷியத்தில் முனையும்போது தடைகள் எவ்வளவு வரினும், முயற்சியைத் தளர்த்தாது முயலுதல் அச்சமின்மையின் இலக்ஷணமாகும்.

"முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" என்பது கோட்பாடு. அச்சமின்மை என்பது முயற்சியில் நிலைநாட்டப்படுகிறது. "நம் நாட்டு மக்களுக்கு இப்போதைய தேவை—ரஜோ குணம்தான். பாரத மக்கள் முழுமையாக விழிப்படைவார்களானால் பாரதநாடு உலகுக்கு ஒரு சிறந்த வழிகாட்டியாக அமையும்" என்று சுவாமி விவேகானந்தர் கூறியுள்ளார். நாம் அனைவரும் முறையான முயற்சியில் இறங்கிப் பாரதத்தின் மேன்மையை நிலைநாட்டுவோமாக.

இனி,அச்சத்தை வெல்வதற்கு வழிமுறையை ஆராயலாம். பதஞ்சலி முனிவர் கூறுகிறபடி, பிரதிபக்ஷபாவனை முறையைக் கொள்வது ஒரு வழியாகும். அதாவது அச்சம் ஏற்படும் பொழுது தைரிய உணர்ச்சியை மனதிற்கு ஊட்டவேண்டும்.

**"அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்ப தில்லையே**
**இச்சகத்து ளோரெலாம் எதிர்த்து நின்ற போதிலும்**
**அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்ப தில்லையே"**

என்று புரட்சிக்கவி பாரதியார் முழங்கியது போன்று உறுதிப்பாட்டுடன் உன்னுவது அச்சத்தை ஒழிக்க ஒரு வழியாகும். விபரீத ஞானத்தால், அதாவது மங்கிய இருளில் உள்ள கம்பத்தைப் பார்த்துப் பேயாக, திருடனாகக் காணும் பாவனையால் தோன்றும் அச்சத்தை, ஆராய்ச்சியால்,உள்ளதை உள்ளவாறு காணும் முயற்சியால் விலக்கவேண்டும். இப்படியாகச் சமய சந்தர்ப்பத்திற்கேற்பத் தைரியத்தைப் பெருக்கி அச்சத்தை விலக்கிக் கொள்ளவேண்டும்.

அச்சத்தின் கேடுகளாவன : 1) அஞ்சுபவன் முதலில் தன் மனவலிவை இழக்கிறான். 2) உடலில் விதவிதமான மாறுபாடுகள் தோன்றி உடலைக் குலைக்கின்றன. 3) உறுதிப்பாடு எல்லா வழிகளிலும் குறைந்து, எதிலும் விரைந்து வெற்றி காணாது தவிக்கும் நிலை ஏற்படுகிறது. எனவே வாழ்வில் வெற்றி காண விரும்புபவர், இலக்ஷியத்தைஅடைய விரும்புபவர் அச்சத்தை ஒழித்து அஞ்சாமையை மேற்கொள்ளவேண்டும்.

---

## செய்திகள்

**நிகழ்ப்பவை**

15—5—83 ஞாயிற்றுக் கிழமையன்று மாலை கோவை சுண்டக்காமுத்தூரிலுள்ள சுவாமி விவேகானந்தர் சங்கம் ஆண்டு விழாவுக்கு ஸ்ரீமத் பரமானந்த சுவாமிகள் தலைமை தாங்கிச் சொற்பொழிவாற்றுவார்கள்.

22—5—83 ஞாயிற்றுக் கிழமையன்று மாலை 6-00 மணியிலிருந்து 6-45 மணிவரை வடஆற்காடு ஜில்லா, மதினுப்பள்ளியில் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் லக்ஷார்ச்சனை நிகழ்த்துவார்கள்.

23—5—83 திங்கட்கிழமை காலை 5 மணி முதல் 6 மணி வரை மதினுப்பள்ளியில் நிகழும் கணபதி ஹோமத்திலும், காலை 6 மணிக்கு மேல் நிகழும் கணேசர் கோவில் கும்பாபிஷேக விழாவிலும் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் கலந்து கொள்வார்கள்; அன்று மதினுப்பள்ளியில் மாலை 6-30 மணியிலிருந்து 8மணிவரை'விநாயகர் பெருமை' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றுவார்கள்; அன்று இரவு 8 மணிக்கு மேல் அங்குச் சிறப்பாக நிகழும் சமபந்தி போஜன விழாவில் கலந்து கொள்வார்கள்.

திருப்பராய்த்துறை ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுலத்தில் மே மாதம் 30ஆம் தேதி புதிய மாணவர்களைச் சேர்ப்பதற்குரிய தேர்வு நடைபெறும். இது சம்பந்தமான விவரங்களைச் சித்திரை மாதத் தர்மசக்கரம் அட்டை இரண்டாம் பக்கம் பார்த்துத் தெரிந்துகொள்ளுங்கள்.

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம் | பிரசார விலை ரூ. | 23-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 14-ம் பதிப்பு | ,, | 18-00 |
| மஹாபாரதம் | ,, | 7-00 |
| இராமாயணம் | ,, | 5-00 |
| ஸ்ரீ தாயுமானசுவாமி பாடல்கள் | ,, | 6-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ | ,, | 5-50 |
| தினசரி தியானம் | ,, | 4-00 |
| ராஜயோக விளக்கம் | | 12-00 |
| கர்மயோக விளக்கம் | | 10-00 |
| பக்தியோக விளக்கம் | | 9-00 |
| ஞானயோக விளக்கம் | | 8-00 |
| பரமஹம்சரின் பெருமை | | 6-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | | 5-50 |
| விவேகானந்த விவரணம் | | 4-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | | 3-50 |
| ஸ்ரீ சாரதாதேவியார் சரிதம் | | 3-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | | 3-00 |
| எதிர்கால இந்தியா | | 3-00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | | 3-00 |
| பஜனைப்பாடல்கள் | | 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | | 2-50 |
| **தாயுமானவர் இயற்றிய** | | |
| கருணாகரக் கடவுள் | விரிவுரை | 3-50 |
| பரிபூரணானந்தம் | ஷை | 3-00 |
| சின்மயானந்த குரு | ஷை | 3-00 |
| ஆனந்தமானபரம் | ஷை | 3-00 |
| சுகவாரி | ஷை | 3-00 |
| மௌனகுரு வணக்கம் | ஷை | 3-00 |
| எங்குநிறைகின்றபொருள் | ஷை | 2-50 |
| மலைவளர் காதலி | ஷை | 1-50 |
| பரசிவ வணக்கம் | ஷை | 1-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | | 2-50 |
| ஹரிச்சந்திரன் | (நாடகம்) | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் | | 1 75 |
| விரதவீரர் பீஷ்மர் | ஷை | 1-50 |
| விபீஷணன் சரணாகதி | ஷை | 1-50 |
| பரமஹம்சர் பாமாலை | | 1-50 |
| காயத்ரீ | | 1-50 |
| நன்மக்களைப் பெறுதல் | | 1-50 |
| அமரநாத யாத்திரை | | 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | | 1-25 |
| இறைவணக்கம் | | 1-00 |
| குழந்தைகளின் களிக்கூடம் | | 1-00 |
| இராவண தத்துவம் | | 1-00 |

| | | |
|---|---|---|
| வாலி மோட்சம் | (நாடகம்) ரூ. | 1-00 |
| தவப்புதல்வர்கள் | (நாடகம்) | 1-00 |
| ஏகலைவ்யனின் குருபக்தி | (நாடகம்) | 1-00 |
| தானவீரன் கர்ணன் | (நாடகம்) | 1-00 |
| மார்க்கண்டேயன் | (நாடகம்) | 1-00 |
| பிரஹ்லாதன் | (நாடகம்) | 1-00 |
| தபோபலன் | (நாடகம்) | 1-00 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் | | 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவ மதமும் | | 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | | 1-00 |
| *ஆத்ம சக்தி | | 1-00 |
| *சக்தி தத்துவம் | | 0-90 |
| சூரியநாராயணன் | | 0-75 |
| தெய்வீக மகிமைகள் | | 0-75 |
| *ஆலய வழிபாடு | | 0-75 |
| *சிவதத்துவம் | | 0-70 |
| *மனிதனது நிஜசொரூபம் | | 0-70 |
| தாயுமானவர் ஆலயத்தில் தத்துவ அமைப்பு | | 0-60 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | | 0-60 |
| *கணபதி | | 0-60 |
| *முருகக் கடவுள் | | 0-50 |
| விஷ்ணு தத்துவம் | | 0-50 |
| கர்மகாண்டம்எது? ஞானகாண்டம்எது? | | 0-50 |
| வர்ணாச்ரம தர்மம் | | 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | | 0-30 |
| விவேகானந்தரின் வீர கர்ஜனை | | 0-30 |
| The Bhagavad Gita (11th Imp) | | 24-00 |
| Tirukkural ( with plastic cover ) | | 8-00 |
| The Indian National Education | | 8-00 |
| Ramakrishna Lives Vedanta | | 8-00 |
| The Bhagavad Gita (Small Size) | | 6-00 |
| Ramayana | (with plastic cover) | 7-00 |
| Mahabharata | ,, | 6-00 |
| Daily Divine Digest (DELUXE) | | 6-00 |
| Daily Divine Digest (Ordinary) | | 4-00 |
| Sri Krishna-The Manifest Divinity | ,, | 6-00 |
| Facets of Brahman or The Hindu Gods | | 5-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | | 4-00 |
| Siva Sahasranama Stotram | | 3-50 |
| Bheeshma The Superman | | 3-50 |
| Hinduism Hosts Christianity | | 3-00 |
| Holy Bible—In the Light of Vedanta | | 1-50 |
| Reminiscences of Master Mahashaya | | 1-50 |
| *Introducing the Gita | | 1-50 |
| The Garland of Paraaparam | | 1-50 |
| *Key to Higher Life | | 1-25 |
| *The Student | | 1-25 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக கீதை, திருவாசகத்திற்கு ரூ. 5-00ம், மஞ்ஜரீக்கு ரூ. 1-80ம் மஹாபாரதத்திற்கு ரூ. 1-80ம் இராமாயணத்திற்கு ரூ. 1-60ம் தினசரி தியானத்திற்கு ரூ. 1-40ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 3-00 முதல் ரூ. 5-00 வரையும் சேர்த்து அனுப்புங்கள். *இப்புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt